உ

குகமயம்.

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்,

௧௦௦-பாடல்

## பஞ்சரத்னத் திருப்புகழ்

மாம்பழக்கவிராயர் அருளிச்செய்த,

## சந்தப்புகழ்,

முதலியன

அருணகிரிநாதர் சரித்திரச் சுருக்கத்துடன்,

---

முனீஸ்வரம்,

சி. பத்மநாப ஐயர்,

பதிப்பித்தது.



---

இந்து கலாபிவிருத்திச் சங்கம்,

சரஸ்வதி புஸ்தகசாலை.

63, ஜிந்துப்பிட்டித்தெரு, கொழும்பு.

---

இரத்தாக்ஷி ஸூ ஆனி மீ.

# முன்னுரை.

சீர்பெற்றுச் சிறந்து விளங்கும் மொழிகளுள் மேன்மை பெற்றுவிளங்கும் நந்தாய்மொழியாகிய தமிழ்மொழியில் அநேக நூல்கள் ஒழுங்காகப் பதிப்பிப்பாரின்றிப் பாழ்பட்டுப் போகின்றன. இத்தகைய குறையை ஒருவாறு நிவிர்த்தித்தற்கு எம்மாற்கூடிய பிரயாசையெடுத்து, தமிழபிமானப் பிரபுக்களின் உதவியைக்கொண்டு பல அரிய தமிழ்நூல்களைச் சுத்தப்பதிப்பாக நல்லகடிதத்தில் பதிப்பித்து நந்தமிழ்நாட்டுக் குபகரித்து வருகின்றோம்.

இத்தகைய நூல்களுள் இது முதலாவது. இதில், அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழில், பாராயணஞ் செய்வோருக்கும் மற்றோருக்கும் உபயோகப்படக்கூடிய ௬00 பாடல்களும் பஞ்சரத்னத் திருப்புகழும் மாம்பழக்கவிராயர் அருளிச்செய்த சந்தப்புகழும் அடங்கியிருக்கின்றன.

இன்னும் அநேக புத்தகங்கள் பதிப்பிக்கத் தயாராயிருக்கிறோம். தற்போது ஏறக்குறைய ௨0 சுப்பிரமணியசுவாமியின் தோத்திரப் பிரபந்தங்களடங்கிய **சுப்பிரமணியசுவாமி தோத்திரக்கோத்து** என்னும் புத்தகத்தைப் பதிப்பித்து வருகின்றோம்.

ஆதலால் தமிழபிமானச் செல்வர்கள் யாவரையும் யாம் பதிப்பிக்கும் நூல்களுக்கு வேண்டிய பொருளுதவி புரிந்து லோகோபகாரார்த்தமான எம் முயற்சியை நன் முயற்சியாக்கும் வண்ணம் அன்போடு வேண்டுகிறோம்.

கொழும்பு,
இரத்தாக்ஷி ஞு
ஆவணிமீ

இங்ஙனம்,

**இந்து கலாபிவிருத்திச்சங்கத்தார்**

# அருணகிரிநாதர்

## சரித்திரச் சுருக்கம்.



இவ்வடியார், ஏறக்குறைய ஐஞ்ஞூறுவருடங்களின் முன், திருவண்ணாமலையிலுள்ள சிவாலயத்தில் ஆடல்பாடல் முதலாகிய தொண்டுகளைச் செய்துவந்த முத்தம்மையென்னுங் கணிகையின் வயிற்றிற் கருப்பமாகிப் பிறந்தார். அக்கணிகை தெய்வபத்தியிற்சிறந்தவளாதலால் தான் தொண்டு செய்துவரும் கடவுளுக்குரிய அருணகிரிநாதரென்னுந் திருநாமத்தையே தன்புதல்வருக்குவைத்து வளர்த்துவந்தாள்.

ஒருநாள் அக்கணிகையின் கனவிற் குமரவேள்தோற்றி "உன் புதல்வன் எமது அடியவனாவான். அவனால் உனக்கும் உலகத்தாருக்கும் அளவிறந்த நன்மைகளுண்டாம்" என்று அருள்செய்து மறைந்தார். அதனாலும் அந்தக்கனவிற்கியைந் தவாறே அவருடையமேனி அற்புதமான தோற்றத்தினை

யுடையதாய்க் காணப்பட்டதனாலும் "இப்புதல்வன் என் வயிற்றிலவதரித்தற்கு என்னதவஞ்செய்தேனோ" என்று அதிசயமும் ஆனந்தமும் மிகுந்தவளாய் அன்புடன்வளர்த்து ஐந்தாம் வயதில் வித்தியாரம்பஞ்செய்வித்தாள்.

அப்புத்திரர் தமதுதாயினாலும் உபாத்தியாயராலும் எவ்வளவாய் ஏவப்பட்டபோதும் கல்விகற்றலிற் சிறிதாயினும் மனத்தைச்செலுத்தாதவராய், வீதிகடோறும் உலாவுதலிலும் விளையாடுதலிலுங் காலத்தைப்போக்கிவந்தார். அவருக்கு ஏழாம்வயது நிகழும்போது தாயாகியமுத்தம்மை விண்ணுலகடைந்தாள். அடையும்போதும் தன்மகனிடத்தில் குமரவேள் தனக்குச்சொப்பனத்தில் அருள்செய்ததையைக்கூறி, விரும்பிய பொருளைக்கொடுத்து ஒருகுறையும் வாராமல் அவரைக்காப்பாற்றும்படி கட்டளையிட்டாள். அவளும் தாயுடையகட்டளைப்படியே தனதுதம்பியை ஆதரித்துவந்தாள். அருணகிரியார் தமது பாலியப்பருவமுழுவதையும் விளையாட்டிலேயே கழித்தார்.

பதினாறுவயதானபின் மங்கையர்போகத்திலாசை கொண்டு தமக்கையிடத்திற் பொருளைவாங்கி அவ்வூரிலுள்ள கணிகையருக்கிறைத்து அவருடன்கூடிச் சிற்றின்பத்தை யனுபவித்துவந்தார். அவர் தினந்தோறுங் கணிகையரைக்

காமித்துத்திரிந்ததனுல் நோயாளியாகி உலகத்தாரால் நிந்திக்கப்பட்டார். தமக்கையிடத்திருந்த பொருளுஞ்செலவாயிற்று, பின்னும் அவர் கணிகையர்போகத்தை வெறுக்காதவராயும் உலகநிந்தையைச் செவிப்படுத்தாதவராயும் தமக்கையிடத்துப் பொருளைக்கேட்டுவர, அவளும் பிறரிடத்திற் கடன்பட்டுக் கொடுத்துவந்தாள். அதனுல் அவளுடைய ஆபரணதிகளும் வீடும் விலைப்பட்டன. இடைவிடாது காம வின்பத்தையனுபவித்தலினுல் அவருக்குக் குட்டநோயுந் தோன்றியது. வயதும் இருபத்துநான்காயிற்று.

அவர் பின்னும் தமக்கையிடம் பொருளை யாசித்துநிற்க அப்பெண்மணி ஒருவாற்ருனும் பொருள் கொடுத்தற்கியலாதவளாய்த் தன் தாய்சொல்லியகட்டளை தவறுகின்றதே யென்று வருந்திப் பின்ஞெருவாறு தேறி "தம்பீ! நான் பொருள்தருதற்கு இயலாதவளானேன். நீரும் நானும் ஒரு வயிற்றிற்பிறந்தாலும் இருவர்பிதாவும்வேருவார், உம்முடைய காமத்தையொழிக்க இயலாவிடின் என்னையே சமர்ப்பிக்கலாகும். வேறு நான்செய்யத்தக்கதொன்றுமில்லை" என்றனள்.

அதுகேட்டவுடன் அருணகிரிநாதருக்குக் கணிகையர்பாற்கொண்டகாமம் அடியோடு தொலைந்தது. தாம் தமக்கை

யின் பொருளை வீணேசெலவுசெய்து அவருக்குத் தீராத மிடியையும் தமக்கு நீங்காத நிந்தையையுமீட்டிக்கொண்டதை யும் காதாற்கேட்கத்தகாத வசனத்தைத் தமக்கைசொல்லக் கேட்டமையையும் நினைந்து பெருந்துக்கமடைந்து தம்மு யிரைத் தெய்வத்திற்குப் பலியிடுதலே தாஞ்செய்தகுற்றத் திற்குத் தீர்வென்று நிச்சயித்துப்போய் அவ்வூர்க்கோயிலி லுள்ள ஓர் கோபுரத்தின்மேலேறிக் குதித்தார்.

அப்போது குமரவேள் ஓர் சந்நியாசிபோலத்தோற்றி அவரை நிலத்தில்விழாவண்ணமேந்திக் காத்துத் திருவடித் தீட்சைசெய்து சடாக்ஷர மந்திரத்தையுபதேசித்துச் செப மாலையையுங்கொடுத்து மறைந்தருளினர். அதன்மேல்அருண கிரியார் குமரவேளின் திருவடிகளில் மனத்தைப்பதித்து வேறொன்றிலும் பற்றில்லாதவராய் அவராலுபதேசிக்கப் பெற்ற சடாக்ஷர மந்திரத்தைச் செபித்துக்கொண்டு அவ்வால யத்திற்றனேயிருந்தார். அவரது தமக்கை மறுநாட்காலையில் அவருடையவரவைக் காணுமையினல் மனம்பதைத்துக் கணிகையர்வீடுதோறுஞ்சென்று தேடிப் பின் திருக்கோவிலி லிருக்கின்றரென்று கேள்விப்பட்டு அங்கேபோய்ச் செபஞ் செய்து கொண்டிருக்கும் அவர்முன்னிலையில் நின்று "நான் அறியாமையினற்சொல்லிய வாசகங்களுக்காக என்மேற்கோ பமுற்று இவ்வேடத்தைத் தரிக்கலாமா? யான்செய்தகுற்ற

த்தைப்பொறுத்து வீடுவந்து சேருக" என்று வேண்டினள். அவர் என் தாயே! உன்சொல்லாற்ருன் துன்மார்க்கத்தினீங்கி உய்யும்வழியைப்பெற்றேன். ஆதலின் எனக்குக்கிடைக்கும் நற்கதி உனக்குங்கிடைக்கும். நீ என்னை நினைத்துக் கவலைப்படவேண்டாம்" என்றுகூறிப் பின்னுஞ் செபத்திலிருந்தார். உடனே அப்பெண்மணி நிகழ்ந்தசம்பவங்களை ஆராய்ந்தறிந்து தன் தாய்சொல்லியகனவு மெய்யாயிற்றென்று நினைத்து மகிழ்ந்துகடவுளைத் தோத்திரஞ்செய்து மீண்டாள்.

அருணகிரியாரைப்பீடித்திருந்த குட்டநோயும் அவருடைய செபபலத்தினுற் சிலநாட்கள்ளின்பின் நீங்கியது, தமக்கை இடையிடைவந்து அவரையுபசரித்து வேண்டியதொண்டுகளைச் செய்துபோனுள் பின்னுஞ் சிலநாட்கள்செல்ல அப்பெண்மணியும் தேகவியோகமாயினள். அருணகிரியார் அவளுக்குச்செய்யவேண்டிய கடன்களை முடித்து உலகப்பற்றைமுற்றத்துறந்தாராய்க் குமரவேளைச் சுயரூபத்தோடு காட்சிதரும்படி பிரார்த்தித்துவந்தார்.

குமரவேள் ஒருநாள் மயில்வாகனத்திலிவர்ந்து அருணகிரியார்முன்னிலையிற் பிரசன்னராகித் தம்மைப்பாடும்படி கட்டளைசெய்து **"முத்தைத்தருபத்தித்திருநகை"** என அடியுமெடுத்துக்கொடுத்துக் கவிபாடுதற்கேற்ற அறிவுத்திறமையையும் அவர்க்குண்டாகும்படியருள்செய்து மறைந்தார்.

அருணகிரிநாதர் அன்றுமுதற் குமரவேள்மேல் திருப்புகழ்பாடிவந்தார். அவருடைய வாயினின்றுபிறக்குந் திருப்புகழைக்கேட்டமாத்திரத்திற் பலர் அவரைவணங்கி உபசரித்துவந்தார்கள். முன்னே அவருடைய துன்மார்க்கநிலையைக் கண்டு நிந்தித்தவர்களெல்லாரும் அவரது மகத்துவத்தையுணர்ந்து சீடராயினர். பலநோயாளர் அவருடைய அருளாற் சுகமடைந்தார்கள். அவரது அற்புதச்செயல்களை அவ்வூரரசனாயிருந்த பிரௌடதேவராயனுங்கேள்வியுற்றுச் சமயம் வாய்த்தபோதெல்லாம் அவரைத்தரிசித்து அவர்பாடுந் திருப்புகழைக்கேட்டுவந்தான்.

பின்னொருநாள் அருணகிரிநாதர் குமரவேள் தரிசனந் தரும்படி திருப்புகழ்பாடி அவரிடம் பிரணவப்பொருளைக் கேட்டுத் தெளிந்து தலயாத்திரைசெய்யத் தொடங்கிப் பழனிமுதலாகிய சுப்பிரமணியத் தலங்களெங்கும்போய்த் திருப்புகழ்பாடி வந்தார். இலங்கையிலும் கதிர்காமம் திருக்கோணமலை என்னும் இரண்டுதலங்கள் அவரால் திருப்புகழ்ப்பாமாலை சூட்டப்பெற்றன. தலயாத்திரை செய்யுங்காலங்களிற்காட்டிய பல அற்புதங்களினாலும் திருப்புகழ்ப் பாக்களின் தாளம் சொற்சுவை பொருட்சுவை முதலியவற்றின் சிறப்பினாலும் தமிழ்த்தேசமுழுவதிலும் அவருக்குப் பெருங்கீர்த்தியும் சன்மானமும் உண்டாயின. இப்படியே

யாத்திரையைமுடித்துப் பின்னுந் திருவண்ணமலையில் வந்து தங்கியிருந்தார்.

அந்நாட்களில், திருமுனைப்பாடி நாட்டைச்சேர்ந்த சனியூரிற்பிறந்தவரும் வடமொழி தமிழ்மொழி யென்னுமிரண்டிலும் பெரும்புலமைவாய்ந்தவரும் பாரதமென்னுங்காப்பியத்தைத் தமிழிற்பாடியவரும் வரபதியாட்கொண்டானுடைய சமஸ்தானவித்துவானுமாகிய வில்லிபுத்தூராழ்வார் பலவூர்களிலும்போய் ஆங்காங்குள்ள புலவர்களுடன் வாதுசெய்து அவர்களைத் தோல்வியுறச்செய்து தாம்வைத்திருந்த துறட்டுக்கோலினால் அவர்களுடைய காதையிழுத்துப்பிடித்து அரிந்து வந்தார். அந்த வில்லிபுத்தூரார் திருவண்ணமலைக்கு வந்தபோது அருணகிரியார்பாடிய திருப்புகழிலும் பலபிழைகளையெடுத்துக்கூறி அவரைவாதுக்கழைத்தார், வாதசபையில், ஒருவர்பாடுஞ் செய்யுளுக்கு மற்றவர் பொருள்சொல்லவேண்டியதென்றும் பொருள்சொல்லாதோர் தோற்றவராவரென்றும் நிச்சயித்தனர். அப்போது அருணகிரியார் குமரவேள்மேல் கந்தரந்தாதியென்னுந் தோத்திர நூலைப் பாடத்தொடங்கினர். வில்லிபுத்தூரார் ஐம்பத்துமூன்றுஞ்செய்யுள் முடியும்வரை பொருள்கூறிவந்தார். அருணகிரியார் * அடுத்தசெய்யு

---

* அச்செய்யுள் வருமாறு:—

திதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்ததி தித்தித்த தேதுத் துதித்திதத்தா

திதத்தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே.

**இதன் பொருள்:** திதத் தத்த தித்த—திதத்தத்தத் தித்த என்னும் தாள அளவை, திதி—(திருநடனத்தாற்)காக்கின்ற, தாதை—பரமசிவனும், தாத—பிரமனும், துத்தி தத்தி தா—படத்தையுடைய பாம்பின் இடத்தையும், தித தத்து அத்தி—நிலைபெற்றதுந் ததும்புகின்றதுமாகிய பாற்கடலையும் (பாயலாகக்கொண்ட), ததி தித்தித்ததே ஞ—தித்திப்பான தயிரையுண்ட திருமாலும், துதித்து—துதிசெய்து (வணங்குகின்ற) (துதித்த என்பது ஈற்றுயிர் தொக்குநின்றதெனக்கொண்டு துதிசெய்கின்ற எனப் பொருள் கூறினுமாம்), இதத்து ஆதி—இன்பரூபியான முதல்வரே, தத்தத்து அத்தி தத்தை தாத—தந்தங்களுடைய ஐராவதயானையால் வளர்க்கப்பெற்ற கிளிபோல் வாளுக்குத் (தெய்வயானைக்குத்) தொண்டரே, தீதே துதை—தீமையேசெறியப்பெற்ற, தாது—ஏழ்வகைத் தாதுகளையுடைய, அதத்து உதி—மாணத்திற்கென்றேபிறந்த, தத்து அத்து—தத்துக்களமைந்த, அத்தி தித்தி—எலும்புக்கூடாகிய இவ்வுடல், தீ தீ திதி—நெருப்பினுலெரியப்பெறும் நிலையில், துதிதீ—உம்மைத் துதிக்கும் புத்தியானது, தொத்தது—(உமக்கு) அடிமையாகக்கடவது.

---

ளைத் தகரமெய்யொன்றேயன்றி வேறொருமெய்யும்விரவாது பாடினர். வில்லிபுத்தூரர் பொருள் தோன்றாது மயங்கி "இக்கவி பொருளமைதியின்றி வாய்போனவாறே பாடப்

பட்டது. நீர் இதற்குப் பொருள்சொல்லின் நான் தோற்ற வனுவேன்" என்ருர். உடனே அருணகிரியார் பொருள் கூறவில்லிபுத்தூரார் வெட்கமுற்றுத் தாம்வைத்திருந்த துற ட்டுகோலேஅவர்முன் எறிந்தனர். அருணகிரியார் புலவர்களே அவமதிசெய்யாது சன்மானித்தொழுகும்படி அவர்க்குக் கற் பித்து, மிகுதிச்செய்யுளேயும் பாடிமுடித்தார்.

சிலகாலங்களின் பின் சம்பந்தாண்டானென்னும் பெயருள்ள சமணனொருவன் கல்வித்திறமையும் மந்திர சித்தியுமுடையவனுய்க் கீர்த்திபெற்றுவந்தான். அவன் அரு ணகிரியார்மேலழுக்காறு கொண்டு அவரைநிந்தித்துவந்தான். நிந்தித்தபோதும் சனங்கள் அவர்மேல்வைத்த மதிப்பும் நம் பிக்கையும் குறைந்தில. பின் அவ்வூரரசனோடு நண்புபூண்டு, ஒருநாள் அவனிடம்போய் "நான் தேவியை உமக்குநேரே காண்பிப்பேன். அருணகிரி தனது வழிபடுகடவுளாகிய குமர வேளே அவ்வாறே உமக்குக்காண்பிக்கவேண்டும். காண்பிக் காதவரெவரோ அவரை இவ்வூரினின்று துரத்துக" என் றுகூறினுன். அரசனும் அதற்கிசைந்து அருணகிரியாருக்கறி வித்துத் தினத்தை நியமித்தான், குறித்ததினத்திற் குறிக்கப் பட்ட இடத்தில் மூவரும் வந்துசேர்ந்தனர்; சம்பந்தாண்டான் தேவியை வழிபட்டு அரசனுக்குக்காட்சி கொடுக்கும்படி வேண்டத் தேவிமறுத்துச்சென்றனள். ஆயினும் அந்தச்

சமணனுடைய கேள்விப்படி தனது புதல்வராகிய குமார வேளை மடியிலிருத்திக்கொண்டாள். அருணகிரியார் தம்பத்தின்மேற் குமரவேள் காட்சிகொடுப்பாரென்று அரசனுக்கு கூறித் திருப்புகழ்பாடினர். பாடியும் குமரவேள் வெளிப்படவில்லை. பின் அருணகிரியார் பகைவன்செய்த சூழ்ச்சியை ஞானத்தாலறிந்து குமரவேளைப் பலமுறையிரந்துபாடி மயிலையுந்துதித்தனர். மயில் அருணகிரியாருக்குப் பரிந்து தேவிமுன்சென்று தோகைகளைப்பரப்பி அழகுற ஆடிற்று. தேவி மயிலினுட்டலில் தமதுமனத்தைச்செலுத்திக் கொண்டிருந்தாள். முருகவேள் அச்சமயத்தில் மடிவிட்டிறங்கி மயிலிலிவர்ந்து தம்பத்தின்மேல் தோற்ற, அருணகிரியார் அரசனுக்குக்காட்டினர். அரசனும் தனக்குக் கடவுளைக் காணும்பாக்கியங் கிடைத்ததேயென்று ஆனந்தித்துத்தரிசித்துத்துதித்தான். [குமரவேள் தூணின்மேல்வெளிப்பட்டு அநுக்கிரகித்தஉருவம் இப்போதும் கம்பத்திளையனாரென்னும் பெயருடன் வழங்குகின்றது]

அதன்மேல் அரசன் சம்பந்தாண்டானை ஊரினின்ற கற்றினனாயினும் அவனுடைய சூழ்ச்சியினாற் சிலநாளின் பின் அவனுக்கு நண்பனாகி அவனுடைய தூண்டுகையினால் தேவலோகத்திலுள்ள பாரிசாதமலரைக் கொணர்ந்துதரும்படி அருணகிரியாரை வேண்டினன். அருணகிரியாரும் சம்

பந்தாண்டானுடைய சூழ்ச்சியிதுவென்றறியாதவராய் அதற்குடன்பட்டுத் தமதுசரீரத்தைக் கோயிற்கோபுரத்தின்மேலுள்ள ஓரிடத்துட் சேமித்துவைத்துக்கிளியுருவாகித் தேவலோகஞ்சென்று இந்திரனுடைய அநுமதிபெற்றுப் பாரிசாதமலரைத் தமது கிளியுருவத்தின் மூக்கினுற்கொய்து கொண்டு மீண்டுவந்தார்.

இதற்கிடையிற் சம்பந்தாண்டான் இவருடைய சரீரம் கோபுரத்தில் மறைக்கப்பட்டிருப்பதையறிந்து, அருணகிரி பாரிசாதமலர்கொண்டுவர இயலாமையினுல் உயிரைவிட்டானென்று வெளிப்படுத்தி, அவ்வுடலைத் தகனஞ்செய்வித்தான்.

மீண்டுவந்த அருணகிரியார் தமதுசரீரந் தகிக்கப்பட்டதையறிந்து குமரவேளின்செயலேயென்று நினைத்துக் கிளியுருவத்தோடு அக்கோபுரத்திற்றங்கியிருந்தார். அவர்கொண்டுவந்த பாரிசாதமலரின் மணம் அவ்வூர்முழுதும் பரவியது. அரசன் அருணகிரிநாதர்கொணர்ந்த மலரின்மணமேயிதுவென்றுதுணிந்து அவருடைய உடலைத் தகனஞ்செய்வித்ததற்காகத் துக்கமுற்று அவர்முன்னிலையில் வந்து புலம்பிக்கொண்டு நின்முன். அருணகிரியார் "அரசனே! நீ கவலைப்படவேணடாம். என்னுடைய மானுடயாக்கையினின்று இது

நமக்குச் சுகத்தைத்தருகின்றது. இவ்வடிவத்தோடு யான் கடவுளைப்பாடுவேன்" என்று கூறி அரசனைத்தேற்றியனுப்பினர்.

பின் அருணகிரிநாதர் கிளியுருவத்துடன் பலகாலமிருந்து பலதோத்திரங்களைப்பாடிக் குமாரவேளுடைய பேரானந்தசுகவாழ்வைப்பெற்றார்.

கிளியுருவத்தோடிருந்தே கந்தரநுபூதியைப் பாடினரென்பர் சிலர். திருவகுப்பு கந்தரலங்காரம் முதலியவைகளும் இவ்வாறு பாடப்பட்டனவாயிருக்கின்றன.

இவரைச் சிலர் பட்டினத்தடிகளின் புதல்வரென்று எழுதியிருக்கின்றார்கள். பழைய அரசர்களதும் வித்துவான்களதும் சீவியகாலத்தை நுட்பமாய் ஆராய்கின்ற சரித்திரகாரர்சிலர் பட்டினத்தடிகள் காலத்திலிருந்து அருணகிரியார் காலம் ஏறக்குறைய நானூறுவருடங்களுக்குப் பிந்தியிருக்கலாமென்று அநுமானிக்கிறார்கள்; ஆதலின் இவரைப் பட்டினத்தடிகளின் புதல்வரெனக் கூறுவது பொருத்தமற்றதாயிருக்கிறது.



| எண். | பாடல் முதற்குறிப்பு. | பாட லெண். | பக்க வெண் |
|---|---|---|---|
| க | அங்கை நீட்டியழைத்து ... | ருகூ | ருஅ |
| உ | அதிருங்கழல்பணிந்து ... | சச | சச |
| ங | அமைவுற்றடைய ... | சஅ | சஅ |
| ச | அம்பொத்தவிழி ... | கஎ | உங |
| ரு | அயிலொத்தெழுமிரு ... | கூஉ | அஎ |
| சு | அருக்குமங்கையர் ... | ச | கூ |
| எ | அருத்திவாழ்வொடு ... | உச | உஅ |
| அ | அல்லில்நேருமின் ... | எக | எக |
| கூ | அல்லிவிழியாலு ... | ருஅ | ருஎ |
| க0 | அவனிதனிலேபிறந்து ... | உஉ | உசு |
| கக | அழகுதவழ்குழல் ... | அஎ | அங |
| கஉ | அன்பாகவந்து ... | சுசு | சுசு |
| கங | ஆரமுலைகாட்டி ... | கூரு | அகூ |
| கச | இயலிசையிலுசித ... | ககூ | உரு |
| கரு | இரவுபகற்பலகாலும் ... | அ0 | எஎ |
| கசு | இருமலுரோக ... | ருங | ருங |
| கஎ | இருவர்மயலோ ... | அக | எஅ |
| கஅ | இருவினையின்மதிமயங்கி ... | கூச | அகூ |
| ககூ | இன்பமுந்துன்பமும் ... | உ0 | உரு |
| உ0 | ஈனமிகுத்துளபிறவி ... | அஅ | அச |
| உக | உலகபசுபாச ... | உரு | உகூ |
| உஉ | எதிரிலாதபத்தி ... | எச | எஉ |
| உங | எனக்கெனயாவும் ... | ரு0 | ரு0 |

| எண். | பாடல் முதற்குறிப்பு. | | பாடலெண். | பக்க எண். |
|---|---|---|---|---|
| ௨௪ | ஏருஞலேநீருய் | ... | ௬௭ | ௬௭ |
| ௨௫ | ஏறுமயிலேறி | ... | | ௪ |
| ௨௬ | ஒருபதுமிருபது | ... | ௪௭ | ௪௭ |
| ௨௭ | ஒருபொழுதுமிரு | ... | ௨௬ | ௨௯ |
| ௨௮ | ஒருவரொடுகண்கள் | ... | ௬௦ | ௬௦ |
| ௨௯ | ஓதிவைத்தவர் | ... | ௫௭ | ௫௬ |
| ௩௦ | கடல்பரவுதரங்க | ... | ௮௨ | ௭௯ |
| ௩௧ | கமலமாதுடனிந்திரை | ... | ௧௨ | ௧௮ |
| ௩௨ | கரிக்குழல்விரித்தும் | ... | ௫௧ | ௫௧ |
| ௩௩ | கருப்பத்தூறிப்பிறவாதே | ... | ௯௮ | ௯௩ |
| ௩௪ | கருவடைந்து | .. | ௩ | ௮ |
| ௩௫ | கருவினுருவாகிவந்து | ... | ௨௩ | ௨௭ |
| ௩௬ | கலைமடவார்தஞ் | ... | ௫௪ | ௫௪ |
| ௩௭ | கலைமேவுஞானப் | ... | ௮௯ | ௮௫ |
| ௩௮ | கறுக்குமஞ்சன | ... | ௫ | ௧௦ |
| ௩௯ | கனகசபைமேவு | ... | ௯௩ | ௮௮ |
| ௪௦ | கனத்திரைக்குமிப் | ... | ௫௬ | ௫௫ |
| ௪௧ | காணுததூரம் | ... | ௮௩ | ௭௯ |
| ௪௨ | காமியத்தழுந்தி | .. | ௩௬ | ௩௮ |
| ௪௩ | காலனிடத்தணுகாதே | ... | ௪௨ | ௪௩ |
| ௪௪ | காலனிடத்தணுகாதே | ... | ௬௯ | ௬௮ |
| ௪௫ | குதலைமொழியினர் | ... | ௭௦ | ௬௯ |
| ௪௬ | குமரகுருபரமுருக | ... | ௩௧ | ௩௩ |

| எண். | பாடல் முதற்குறிப்பு. | | பாடலெண். | பக்க எண். |
|---|---|---|---|---|
| ௪௭ | குமுதவாய்க்கனி | ... | ௬௧ | ௬௧ |
| ௪௮ | கைத்தலநிறைகனி | ... | ௧ | ௫ |
| ௪௯ | கொங்கைப்பணையில் | ... | ௧௮ | ௨௪ |
| ௫0 | கோடானமடவார்கள் | ... | ௮௪ | ௮0 |
| ௫௧ | சந்தனந்திமிர்ந்தணைந்து | ... | ௧0 | ௧௬ |
| ௫௨ | சம்பந்தத்தொடாலே | ... | ௯ | ௧௫ |
| ௫௩ | சரணகமலாலயத்தை | ... | ௩௫ | ௩௭ |
| ௫௪ | சரத்தேயுதித்தா | ... | ௭௫ | ௭௩ |
| ௫௫ | சரவணசாதா நமோநம | ... | ௬௫ | ௬௪ |
| ௫௬ | சரியையாளர்க்கு | ... | ௭௬ | ௭௪ |
| ௫௭ | சிரத்தானத்தில் | ... | ௭௯ | ௭௭ |
| ௫௮ | சினத்திலத்தினை | ... | ௫௨ | ௫௨ |
| ௫௯ | சீர்சிறக்குமேனி | ... | ௮௬ | ௮௨ |
| ௬0 | செகமாயையுற் | ... | ௩௨ | ௩௪ |
| ௬௧ | ஞாலமெங்கும் | ... | ௬௮ | ௬௮ |
| ௬௨ | தண்டேனுண்டே | ... | ௧௩ | ௧௯ |
| ௬௩ | திடமிலிசற்குணமிலி | ... | ௨௭ | ௩0 |
| ௬௪ | திரிபுரமதனை | ... | ௯௯ | ௯௪ |
| ௬௫ | திருமகளுலாவு | ... | ௭௩ | ௭௧ |
| ௬௬ | தெருவினில்நடவா | ... | ௩௭ | ௩௮ |
| ௬௭ | நாசர்தங்கடையதனில் | ... | ௩௮ | ௩௯ |
| ௬௮ | நிறைமதிமுகமெனும் | ... | ௩௯ | ௪0 |
| ௬௯ | நினைத்ததெத்தனையில் | ... | ௫௫ | ௫௫ |

| எண். | பாடல் முதற்குறிப்பு. | | பாடலெண். | பக்க எண். |
|---|---|---|---|---|
| ௭௦ | பகலிரவினிற்றடுமாறு | ... | ௬௨ | ௬௨ |
| ௭௧ | பத்தியால்யானுனை | ... | ௬௪ | ௬௪ |
| ௭௨ | பாதிநதிபோது | ... | ௪௦ | ௪௧ |
| ௭௩ | பாலாய்நூலாய் | ... | ௮௫ | ௮௧ |
| ௭௪ | பால்மொழிபடித்துக்காட்டி | ... | ௯௬ | ௯௦ |
| ௭௫ | புவியதனிற்பிரபுவான | ... | ௪௬ | ௪௬ |
| ௭௬ | பொரியப்பொரிய | ... | ௪௯ | ௪௯ |
| ௭௭ | பொருப்புறுங் | ... | ௧௧ | ௧௭ |
| ௭௮ | மருவேசெறித்தகுழலார் | ... | ௩௩ | ௩௫ |
| ௭௯ | மலரணிகொண்டை | ... | ௩௦ | ௩௧ |
| ௮௦ | மன்றலங்கொந்துமிசை | ... | ௬ | ௧௨ |
| ௮௧ | மாதர்வசமாய் | ... | ௭௭ | ௭௫ |
| ௮௨ | முகத்தைப்பிலுக்கி | ... | ௪௫ | ௪௫ |
| ௮௩ | முத்தைத்தரு | ... | ௨ | ௬ |
| ௮௪ | முலையைமறைத்து | ... | ௭௧ | ௭௦ |
| ௮௫ | மேகலையை நெகிழ்த்து | ... | ௯௭ | ௯௨ |
| ௮௬ | வசனமிகவேற்றி | ... | ௨௮ | ௩௦ |
| ௮௭ | வஞ்சகலோபமூடர் | ... | ௪௩ | ௪௩ |
| ௮௮ | வடத்தைமிஞ்சிய | ... | ௭ | ௧௩ |
| ௮௯ | வடிவதுநீலங்காட்டி | ... | ௯௧ | ௮௬ |
| ௯௦ | வரதாமணிநீ | ... | ௨௯ | ௩௧ |
| ௯௧ | வரியார்கருங்கண் | ... | ௨௧ | ௩௬ |
| ௯௨ | வரைத்தடங்கொங்கை | ... | ௮ | ௧௪ |

| எண். | பாடல் முதற் குறிப்பு. | | பாட லெண். | பக்க எண். |
|---|---|---|---|---|
| கூ௩ | வரையறவற்றமடமாதர் | ... | க00 | கூரு |
| கூச | வாசித்துகாணொணாதது | ... | சா௩ | சாஉ |
| கூரு | வாதமொடுசூலை | ... | சக | சஉ |
| கூசா | விதிபோலுமுந்த | ... | கரு | உக |
| கூஎ | விலைக்குமேனியில் | ... | எஅ | எரு |
| கூஅ | விழியால் மருட்டி | ... | ௩ச | ௩சா |
| கூகூ | விறல்மாரனைந்து | ... | கசா | உஉ |
| க00 | வெங்காளம்பா | ... | கச | ௩0 |
| க0க | வேளமுண்டவிளாகனி | ... | கூ0 | அரு |

# ஸ்தல அட்டவணை.

| எண் | ஸ்தலங்கள். | | பாடல் தொகை. | பக்கம் |
|---|---|---|---|---|
| க | விநாயகர் துதி (பொது) | ... | க | ரு |
| உ | சுப்பிரமணியர் துதி (பொது) | ... | க | சா |
| ௩ | திருப்பரங்குன்றம் | ... | கூ | அ |
| ச | திருச்செந்தூர் | ... | க0 | கஅ |
| ரு | திருவாவினன்குடி (பழநி) | ... | கூ | உசா |
| சா | திருவேரகம் (சுவாமிமலை) | ... | கஉ | ௩௩ |

# ஸ்தல அட்டவணை.


| எண். | ஸ்தலங்கள். | பாடல் தொகை. | பக்கம். |
|---|---|---|---|
| எ | குன்றுதோறாடல் ... | உ | ச௩ |
| அ | கயிலைமலை ... | உ | சரு |
| கூ | ஸ்ரீசைலம் ... | க | சஎ |
| க0 | திருத்தணிகை ... | க0 | சஅ |
| கக | வள்ளிமலை ... | க | ருஎ |
| கஉ | திருச்சிராப்பள்ளி ... | ரு | ருஅ |
| க௩ | இரத்னகிரி ... | ௩ | சாச |
| கச | விநாயகமலை ... | க | சாச |
| கரு | திருச்செங்கோடு ... | ச | சாசா |
| கசா | கழுகுமலை ... | உ | சாகூ |
| கஎ | வள்ளியூர் ... | க | எக |
| கஅ | கதிர்காமம் ... | ரு | எக |
| ககூ | திருக்கோணமலை ... | க | எரு |
| உ0 | திருக்காளத்தி ... | க | எஎ |
| உக | திருவருணை ... | கூ | எஎ |
| உஉ | மதுரை ... | க | அரு |
| உ௩ | காசி ... | க | அரு |
| உச | திருவாலங்காடு ... | க | அசா |
| உரு | திருமயிலை ... | க | அஎ |
| உசா | சிதம்பரம் ... | உ | அஅ |
| உஎ | வயலூர் ... | க | அகூ |
| உஅ | பொது ... | ரு | கூ0 |



அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்.

100 பாடல்.



# திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரம்.

## நூற்சிறப்பு.

எல்லாரு ஞானத் தெளிஞரே கேளீர்சொல்
கல்லெல்லா மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ காணமயில் வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி

வேதம்வேண் டாஞ்சகல வித்தைவேண் டாங்கீத
நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டா—மாதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்ருள் போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்

## நூற்பயன்.

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம் பெறலாம்—மோனவீ
டேறலாம் யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினர்க் காமேயிக் கூறு.

ஆறுமுகந் தோன்றும் அழகியவேல் தோன்றுமவன்
ஏறுமயில் தோன்று மெழில்தோன்றுஞ்—சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்தினேர் பால்

ஓராறு மாமுகனும் உச்சிதமெய்ஞ் ஞானகுகன்
போரா லருணகிரி பேருலகில்—சீராரும்
தோத்திரம தாகத் துதிக்குந் திருப்புகழை
ஏத்தினவ ரீடேறு வார்.

திருப்புகழைக் கற்கத் திருப்புகழைக் கேட்கத்
திருப்புகழை நித்தஞ் செபிக்கத்—திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே கூற்றைவென்று
கெர்ச்சிக்க லாமே கெடீ.

உ

குகமயம்.



# திரு அருவணா.

---

## ஆசிரிய விருத்தம்.

---

ஏறுமயி லேறிவிளை யாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதியரு ணசல மமர்ந்தபெரு மாளே



விநாயகக் கடவுள்.

உ

சிவமயம்.

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்.

(௧௦௦ பாடல்)

## விநாயகர் துதி.

(௧) தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான.

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவர்
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

---

## சுப்பிரமணியர் துதி.

(உ) தத்தத்தன தத்தத்தன தன
தத்தத்தன தத்தத்தன தன
தத்தத்தன தத்தத்தன தன தனதான

முத்தைத்தரு பத்தித்திருநகை
அத்திக்கிறை சத்திச்சரவண
முத்திக்கொரு வித்துக்குருபர னெனவோதும்
முக்கட்பர மற்குச்சுருதியின்
முற்பட்டது கற்பித்திருவரு
முப்பத்துமு வர்க்கத்தமரரு மடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணைதொடு
மொற்றைக்கிரி மத்தைப்பொருதொரு
பட்டப்பகல் வட்டத்திகிரியி லிரவாக
பத்தற்கிர தத்தைக்கடவிய
பச்சைப்புயன் மெச்சித்தருபொருள்
பட்சத்துடன் ரட்சித்தருளுவ தொருநாளே

தித்தித்திசை யொக்கப்பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப்பயிரவி
திக்கொக்கந டிக்கக்கழுகொடு கழுகாடத்
திக்குப்பரி வட்டக்கலைகொடு
சித்ரப்பவு ரிக்குத்திருதிரு
திக்குத்திரு திக்குத்திரிகட மெனவோதும்

கொத்துப்பறை கொட்டக்களமிசை
குக்குக்குகு குக்குக்குகுகுகு
குத்திப்புதை புக்குப்பிடியென முதுகூகை
கொட்புற்றெழ நட்பற்றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக்குலகிரி
குத்துப்பட வொத்திப்பொரவல பெருமாளே

அ

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்பரங்குன்றம்.

(௫.)

தனன தந்த தத்தத்தனந்த
தனன தந்த தத்தத்தனந்த
தனன தந்த தத்தத்தனந்த தனதான

கருவடைந்து பத்துற்றதிங்கள்
வயிறிருந்து முற்றிப்பயின்று
கடையில்வந்து தித்துக்குழந்தை வடிவாகி
கழுவியங்கெ டுத்துச்சுரந்த
முலையருந்தி விக்கிக்கிடந்து
கதறியங்கை கொட்டித்தவழ்ந்து நடமாடி

அரைவடங்கள் கட்டிச்சதங்கை
யிடுகுதம்பை பொற்சுட்டிதண்டை
அவையணிந்து முற்றிக்கிளர்ந்து வயதேறி
அரியபெண்கள் நட்பைப்புணர்ந்து
பிணியுழன்று சுற்றித்திரிந்த
தமியனுன்க்ரு பைச்சித்தமென்று பெறுவேனோ

இரவியிந்த்ரன் வெற்றிக்குரங்கி
னரசரென்று மொப்பற்றவுந்தி
யிறைவனெண்கி னக்கர்த்தனென்றும் நெடுநீலன்
எரியதென்றும் ருத்ரற்சிறந்த
அனுமனென்றும் ஒப்பற்றவண்டர்
எவருமிந்த வர்க்கத்தில்வந்து புனமேவ

அரியதன்ப டைக்கர்த்தரென்று
அசுரர்தங்கி ளைக்கட்டைவென்ற
அரிமுகுந்தன் மெச்சுற்றபண்பின் மருகோனே
அயனையும்பு டைத்துச்சினந்து
உலகமும்ப டைத்துப்பரிந்துள்
அருள்பரங்கி ரிக்குட்சிறந்த பெருமாளே

(௪) தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன தனதான

அருக்குமங்கையர் மலரடிவருடியுங்
கருத்தறிந்தபி னரைதனிலுடைதனை
அவிழ்த்துமங்குள வரசிலைதடவியு மிருதோளுற்
றணைத்துமங்கையி னடிதொறுநகமெழ
உதட்டைமென்றுப லிடுகுறிகளுமிட [விட்
அடிக்களந்தனில் மயில்குயில்புறவென மிகவாய்
டுருக்குமங்கியின் மெழுகெனவுருகிய
சிரத்தையிஞ்சிடு மனுபவமுறுபவ
முறக்கையின்கனி நிகரெனவிலகிய முலைமேல்வீழ்ந்
துருக்கலங்கிமெ யுருகிடவமுதுகு
பெருத்தவுந்தியின் முழுகிமெயுணர்வற
வுழைந்திடுங்கன கலவியைமகிழ்வது தவிர்வேனோ

இருக்குமந்திர மொழிவகைமுனிபெற
வுரைத்தசம்ப்ரம சரவணபவகுக
விதத்தவிங்கித மிலகியவறுமுக வெளில்வேளென்
றிலக்கணங்களு மியலிசைகளுமிக
விரிக்குமம்பல மதுரிதகவிதனை
யியற்றுசெந்தமிழ் விதமொடுபுயமிசை புனைவோனே
செருக்குமம்பல மிசைதனிலசைவுற
நடித்தசங்கர வழிவழியடியவர்
திருக்குருந்தடி யருள்பெறவருளிய குருநாதர்
திருக்குழந்தையு மெனவவர்வழிபடு
குருக்களின்றிற மெனவருபெரியவ
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமாளே

(ரு) தனத்தனந்தன தனதனதனதன
தனத்தனந்தன தனதனதனதன
தனத்தனந்தன தனதனதனதன—தனதான

கறுக்குமஞ்சன விழியிணையயில்கொடு
நெருக்கிநெஞ்சுற வெறிதருபொழுதரு
கனிக்குளின்சுவை யமுதுகுமொருசிறு நகையாலே
களக்கொழுங்கலி வலைகொடுவிசிறியெ
மனைக்கெழுந்திரு மெனமனமுருகவொர்
கவற்சிகொண்டிட மனைதனிலழகொடு கொடுபோகி

நறைத்தபஞ்சணை மிசைதனின்மணமுற
வணைத்தகந்தனி லிணைமுலையெதிர்பொர
நகத்தழுந்திட வமுதிசழ்பருகியு மிடறூடே
நடித்தெழுங்குரல் குமுகுமுகுமுவென
விசைத்துநன்கொடு மனமதுமறுகிட
நழுப்புநஞ்சன சிறுமிகடியாற வருள்வாயே

நிறைத்ததெண்டிரை மொகுமொகுமொகுவென
வுரைத்தகஞ்சுகி முடிநெறுநெறுவென
நிரைத்தவண்டமு கிடுகிடுகிடுவென வரைபோலும்
நிவத்ததிண்கழல் நிசிசரருரமொடு
சிரக்கொடுங்குவை மலைபுரைதரவிரு
நிணக்குழம்பொடு குருதிகள் சொரிதர வடிவேலா

திறற்கருங்குழ லுமையவளருளுறு
புழைக்கைமும்மத கயமுகமிகவுள
சிவக்கொழுந்தன கணபதியுடன்வரு மிளையோனே
சினத்தொடுஞ்சம ணுதைபடநிறுவிய
பரற்குளன்புறு புதல்வநன்மணியுகு
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமானே.

(௬) தந்தனந்தந்ததன தந்தனந்தந்ததன
தந்தனந்தந்ததன தனதான

மன்றலங்கொந்துமிசை தெந்தனந்தெந்தனென
வண்டினங்கண்டுதொடர் குழல்மாதர்
மண்டிடுந்தொண்டையமு துண்டுகொண்டன்புமிக
வம்பிடுங் கும்பகன தனமார்பில்

ஒன்றவம்பொன்றுவிழி கன்றவங்கங்குழைய
வுந்தியென்கின்றமடு விழுவேனை
உன்சிலம்புங்கனக தண்டையுங்கிண்கிணியும்
ஒண்கடம்பும்புனையும் அடிசேராய்

பன்றியங்கொம்புகம டம்புயங்கஞ்சுரர்கள்
பண்டையென் பங்கமணி பவர்சேயே
பஞ்சரங்கொஞ்சுகிளி வந்திருந்தைந்துகர
பண்டிதன்றம்பியெனும் வயலூரா

சென்றுமுன்குன்றவர்கள் தந்தபெண்கொண்டுவளர்
செண்பகம்பைம்பொன்மலர் செறிசோலை
திங்களுஞ்செங்கதிரு மங்குலுந்தங்குமுயர்
தென்பரங்குன்றிலுறை பெருமாளே

(எ) தனத்ததந்தன தனதன தனதன
தனத்ததந்தன தனதன தனதன
தனத்ததந்தன தனதன தனதன—தனதான

வடத்தைமிஞ்சிய புளகித வனமுலை
தனைத்திறந்தெதிர் வருமிளைஞர்களுயிர்
மயக்கியைங்கணை மதனனையொருஅரு மையினாலே
வருத்திவஞ்சக நினைவொடு மெலமெல
நகைத்துநண்பொடு வருமிருமெனவுரை
வழுத்தியங்கவ ரொடுசருவியுமுடல் தொடுபோதே
விடத்தைவென்றிடு படைவிழி கொடுமுள
மருட்டிவண்பொருள் கவர்பொழுதினில்மய [னே
விருப்பெனும்படி மடிமிசையினில்விழு தொழில்தா
விளைத்திடும்பல கணிகையர்தமதுபொய்
மனத்தைநம்பிய சிறியனைவெறியனை
விரைப்பதந்தனில் அருள்பெறநினைகுவ துளதோதான்
குடத்தைவென்றிரு கிரியெனவெளில்தள
தளத்தகொங்கைகள் மணிவடமணிசிறு
குறக்கரும்பின்மெய் துவள்புயனெனவரு வடிவேலா
குரைக்கருங்கடல் திருவணையெனமுனம்
அடைத்திலங்கையி னதிபதிநிசிசரர்
குலத்தொடும்பட வொருகணைவிடுமரி மருகோனே

திடத்தெதிர்த்திடு மசுரர்கள் பொடிபட
அயிற்கொடும்படை விடுசரவணபவ
திறற்குகன்குரு பரனெனவருமொரு முருகோனே
செழித்ததண்டலை தொறுமிலகியகுட
வளைக்குலந்தரு தரளமுமிகுமுயர்
திருப்பரங்கிரி வளநகர்மருவிய பெருமாளே

(அ) தனத்தனந் தந்ததான
தனத்தனந் தந்ததான
தனத்தனந் தந்ததான—தனதான

வரைத்தடங் கொங்கையாலும்
வளைப்படுஞ் செங்கையாலும்
மதர்த்திடுங் கொண்டையாலும் அனைவோரும்
வடுப்படுந் தொண்டையாலும்
விளைத்திடுஞ் சண்டையாலும்
மருட்டிடுஞ் சிந்தைமாதர் வசமாகி
எரிப்படும் பஞ்சுபோல
மிகக்கெடுந் தொண்டனேனும்
இனற்படுந் தொந்தவாரி கரையேற
இசைத்திடுஞ் சந்தபேத
மொலித்திடுந் தண்டைசூழும்
இணைப்பதம் புண்டரீக மருள்வாயே

சுரர்க்குவஞ் சஞ்செய்சூரன்
இளைக்கவுஞ் சந்தரோடு
துளக்கெழுந் தண்டகோள மளவாகத்
துரத்தியன் றிந்த்ரலோகம்
அழித்தவன் சம்ப்ரதாயஞ்
சுடப்படுஞ் சண்டவேலை விடுவோனே
செருக்கெழுந் தும்பர்சேனை
துளக்கவென் றண்டமூடு
தெழித்திடுஞ் சங்கபாணி மருகோனே
தினைப்புனஞ் சென்றுலாவு
குறத்தியின் பம்பராவு
திருப்பரங் குன்றமேவு பெருமாளே

(கூ) தந்தனந்தந்தத் தனதான

சந்ததம்பந்தத் தொடராலே
சஞ்சலந்துஞ்சித் திரியாதே
கந்தனென்றென்றுற் றுனைநாளும்
கண்டுகொண்டன்புற் றிடுவேனோ
தந்தியின்கொம்மைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவைபாலா
செந்திலங்கண்டிக் கதிர்வேலா
தென்பரங்குன்றிற் பெருமாளே

(ம) தந்தனந் தனந்ததந்த
தந்தனந் தனந்ததந்த
தந்தனந் தனந்ததந்த—தன தான

சந்தனந் திமிர்ந்தணைந்து
குங்குமங் கடம்பிலங்கு
சம்பகஞ் செறிந்திலங்கு திரடோளும்
தண்டையஞ் சிலம்பலம்ப
வெண்டையஞ் சலன்சலென்று
சந்தமன் சதங்கைகொஞ்ச மயிலேறித்
திந்திமிந் திமிந்திமிந்தி
தந்தனந் தனந்தனென்று
சென்றசைந் துகந்துவந்து க்ருபையோடே
சிந்தையங் குலம்புகுந்து
சந்ததம் புகழ்ந்துணர்ந்து
செம்பதம் பணிந்திரென்று மொழிவாயே
அந்தமந் திகொண்டிலங்கை
வெந்தழிந் திடும்பகண்டன்
அங்கமுங் குலைந்தரங்கொள் பொடியாக
அம்பகும் பனுங்கலங்க
வெஞ்சினம் புரிந்துகன்ற
அம்புகொண் டுவென்றகொண்டல் மருகோனே

இந்துவுங் காந்ததும்பை
கொன்றையுஞ் சலம்புனைந்தி
டும்பரன் சிலம்பமர்ந்த குமரேசா
இந்திரன் பதம்பெறண்டர்
தம்பயங் கடிந்துழுந்த
எங்கணுங் கமழ்ந்திருந்த பெருமாளே

(கக) தனத்தனந்தன தனத்தனந்தன
தனத்தனந்தன தந்ததான

பொருப்புறுங்கொங்கையர் பொருட்கவர்ந்தொன்றிய
பிணக்கிடுஞ்சண்டிகள் வஞ்சமாதர்
புயற்குழன்றங்கமழ் அறற்குலந்தங்கவிர்
முருக்குவண் செந்துவர் தந்துபோகம்
அருத்திடுஞ்சிங்கியர் தருக்கிடுஞ்செங்கயல்
அறச்சிவந்தங்கையில் அன்புமேவும்
அவர்க்குழன்றங்கமு மறத்தளர்ந்தென்பயன்
அருட்பதம்பங்கய மன்புறுரோ
யிருத்தனும்பங்கய னலர்க்கணன்சங்கரர்
விதித்தெனுங்கும்பிடு கந்தவேளே
இடுக்கண் உந்துஞ்சம ணரைப்பெருந்திண்கழு
மிசைக்கிடுஞ்செந்தமி ழங்கவாயா
செருக்குதண்சம்பக வனத்திடங்கொங்கொடு
திறற்செழுஞ்சந்தகில் துன்றிநீடு
தினைப்புனம்பைங்கொடி தனத்துடன்சென்றணை
திருப்பரங்குன்றுறை தம்பிரானே

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருச்செந்தூர்.

(கஉ) தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன — தன தான

கமலமாதுட னிந்திரையுஞ்சரி
சொலவொணாதம டந்தையர்சந்தன
களபசீதள கொங்கையிலங்கையி லிருபோதே
களவுநூல்தெரி வஞ்சனையஞ்சன
விழியின்மோகித கந்தசுகந்தரு
கரியவோதியி லிந்துமுகந்தனில் மருளாதே

அமலமாகிய சிந்தையடைந்தகல்
தொலைவிலாதஅ றம்பொருளின்பமும்
அடையவோதியு ணர்ந்துதணந்தபின் அருள்தானே
அறியுமாறுபெ றும்படியன்பினின்
இனியநாதசி லம்புபுலம்பிடும்
அருணஆடக கிண்கிணிதங்கிய அடிதாராய்

குமரிகாளிப யங்கரிசங்கரி
கவுரிநீலிப ரம்பரையம்பிகை
குடிலையோகினி சண்டினிகுண்டலி எமதாயி
குறைவிலாளுமை மந்தரியந்தரி
வெகுவிதாகம சுந்தரிதந்தருள்
குமாரமூஷிக முந்தியவைங்கர கணாாயன்

மமவிநாயக னஞ்சுமிழ்கஞ்சுகி
அணிகஜானன விம்பனொம்புலி
மவுலியானுறு சிந்தையுகந்தரு — ளிளையோனே
வளரும்வாழையு மஞ்சளுமிஞ்சியும்
இடைவிடாது நெருங்கியமங்கல
மகிமைமாநகர் செந்திலில் வந்துறை — பெருமாளே

(கரு) தந்தானந்தா தந்தானந்தா
தந்தானந்தத் தனதான

தன்டேனுண்டே வண்டார்வஞ்சேர்
தண்டார்மஞ்சுக் — குழல்மாறுர்
தம்பாலன்பார் நெஞ்சேகொண்டே
சம்பாவஞ்சொற் — றடிநாயேன்
மண்டேயந்தீ மென்கால்விண்டோய்
.. வண்காயம்பொய்க் — குடில்வேறுய்
.. வன்கானம்போ யண்டர்முன்பே
... வந்தேதநின்பொற் — கழல்தாராய்
கொண்டாடும்பேர் கொண்டாடுஞ்சூர்
கொன்றாய் வென்றிக் — குமரேசா
கொங்கார்வண்டார் பண்பாடுஞ்சீர்
குன்றுமன்றற் — கிரியோனே
கண்டாகும்பா லுண்டாயண்டார்
கண்டாகந்தப் — புயவேளே
கந்தாமைந்தா ரந்தோள்மைந்தா
கந்தா செந்திற் — பெருமாளே

(கசு) தந்தானந்தா தந்தானந்தா
தந்தானந்தத் தனதான

வெங்காளம்பா ணஞ்சேல்கண்பால்
மென்பாகஞ்சொற் குயில்மாலை
மென்கேசந்தா னென்றேகொண்டார்
மென்றோளொன்றப் பொருள்தேடி

வங்காளஞ்சோ னஞ்சீனம்போய்
வன்பேதுன்பப் படலாமோ
மைந்தாருந்தோள் மைந்தாவந்தா
வந்தேயிந்தப் பொழுதாள்வாய்

கொங்கார்பைந்தே னுண்டேவண்டார்
குன்றாள் கொங்கைக் கினியோனே
குன்றுடுஞ்சூ ழம்பேழுஞ்சூ
ரும்போயுமங்கப் பொருகோபா

கங்காளஞ்சேர் மொய்ம்பாரன்பார்
கன்றேயும்பர்க் கொருநாதா
கம்பூர்சிந்தார் தென்பால்வந்தாய்
கந்தாசெந்திற் பெருமாளே

(கரு) தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த தனதான

விதிபோலு முந்த விழியாலு மிந்து
நுதலாலு மொன்றி யிளைஞோர்தம்
விரிவான சிந்தை யுருவாகி நொந்து
விறல்வேறு சிந்தை வினையாலே

இதமாகி யின்ப மதுபோத வுண்டுள்
இனிதாளு மென்று மொழிமாதர்
இருளாய துன்ப மருள்மாய பந்தம்
எனையீர்வ தென்று மொழியாதோ

மதிசூடி யண்டர் பதிவாழ மண்டி
வருமால முண்டு விடையேறி
மறவாத சிந்தை யடியார்கள் பங்கில்
வருதேவ சம்பு தருபாலா

அதிமாய மொன்றி வருசூர் பொன்ற
அயில்வேல் கொடன்று பெரும்வீரா
அழகான செம்பொன் மயில்மேல மர்ந்து
அலைவாய் உகந்த பெருமாளே

(கரு) தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த தனதான

விறல்மாரனைந்து மலர்வாளி சிந்த
மிகவானிலிந்து வெயில்காய
மிதவாடைவந்து தழல்போலவொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூறக்

குறவாணர்குன்றி லுறைபேதைகொண்ட
கொடிதான துன்ப மயல்தீரக்
குளிர்மாலையின்க ணணிமாலைதந்து
குறைதீரவந்து குறுகாயோ

மறிமானுகந்த இறையோன்மகிழ்ந்து
வழிபாடுதந்த மதியாளா
மலைமாவுசிந்த அலைவேலையஞ்ச
வடிவேலெறிந்த அதிதீரா

அறிவாலறிந்து னிருதாளிறைஞ்சும்
அடியாரிடைஞ்சல் களைவோனே
அழகான செம்பொன் மயில்மேலமர்ந்து
அலைவாயுகந்த பெருமாளே

கஎ. தந்தத்தனனத் தந்தத்தனனத்
தந்தத்தனனத் தன தான.

அம்பொத்தவிழித் தந்தக்கலகத்
தஞ்சிக்கமலக் கணையாலே
அன்றிற்குமனற் றென்றற்குமிளைத்
தந்திப்பொழுதிற் பிறையாலே

எம்பொற்கொடிமற் றுன்பக்கலனற்
றின்பக்கலவித் துயராளுள்
என்பெற்றுலகிற் பெண்பெற்றவருக்
கின்பப்பலியுற் றிடலாமோ

கொம்புக்கரிபட் டஞ்சப்பதுமக்
கொங்கைக்குறவிக் கினியோனே
கொன்றைச்சடையர்க் கொன்றைத்தெரியக்
கொஞ்சித்தமிழைப் பகர்வோனே

செம்பொற் சிகரப் பைம்பொற்கிரியைச்
சிந்தக்கறுவிப் பொரும்வேலா
செஞ்சொற்புலவர்க் கன்புற்றதிருச்
செந்திற் குமரப் பெருமாளே

(கஅ) தந்தத்தனனத் தந்தத்தனனத்
தந்தத்தனனத் தனதான.

கொங்கைப்பணையிற் செம்பொற்செறிவிற்
கொண்டற்குழலிற் கொடிதான
கொன்றைக்கணையொப் பந்தக்கயலிற்
கொஞ்சக்கிளியுற் றுறவான

சங்கத்தொனியிற் சென்றிற்கடையிற்
சந்திப்பவரைச் சருவாதே
சந்தப்படியுற் றென்றற்றலையிற்
சந்தப்பதம்வைத் தருள்வாயே

அங்கப்படைவிட் டன்றைப்படுகைக்
கந்திக்கடலிற் கடிதோட
அந்தப்பொழிலிற் சந்துத்தலையுற்
றஞ்சப்பொருதுற் றொழியாதே

செங்கைக்கதிருற் றொன்றக்கடலிற்
சென்றுற்றவர்தற் பொருளானாய்
சிந்தைக்கனிவைத் தந்தப்பொழிலிற்
செந்திற்குமரப் பெருமானே

(கக) தனனதன தனனதந்தத் தனதான

இயலிசையி லுசிதவஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனதுசிந்தித் துழலாதே
உயர்கருணை புரியுமின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியுமன்பைத் தருவாயே
மயில்தகர்க லிடையாந்தத் தினைகாவல்
வனசகுற மகளைவந்தித் தணைவோனே
கயிலைமலை யனையசெந்திற் பதிவாழ்வே
கரிமுகவ னிளையகந்தப் பெருமாளே

(உய) தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந்
தந்தனந் தந்தனந்—தனதான

இன்பமுந் துன்பமுஞ் சந்ததங் கொண்டுசென்
றிங்குமங் குஞ்சுழன் றிடுமாயத்
துன்பவெண் கும்பியங் கந்தவிர்ந் துன்பெருந்
தொண்டனென் றுய்ந்துளங் களியேனோ
புன்குருந் துந்தியஞ் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசும்
தன்பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணுந்
தந்திடுஞ் செந்திலம் பெருமாளே

(உக) தனனு தனந்த தனதான

வரியார் கருங்கண் மடமாதர்
மகவாசை தொந்த மதுவாகி
இருபோது நைந்து மெலியாதே
இருதாளி னன்பு தருவாயே
பரிபால னஞ்செய் தருள்வோனே
பரமேசு ரன்ற னருள்பாலா
அரிகேச வன்றன் மருகோனே
அலைவா யமர்ந்த பெருமாளே

# திருவாவினன்குடி. (பழநி.)

(உஉ) தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த தனதான.

அவனிதனி லேபிறந்து மதலையென வேதவழ்ந்து
அழகுபெற வேநடந்து இளைஞோனய்
அருமழலை யேமிகுந்து குதலைமொழி யே புகன்று
அதிவிதய தாய்வளர்ந்து பதினாறாய்

சிவகலைக ளாகமங்கள் மிகவுமறை யோதுமன்பர்
திருவடிக ளேநினைந்து துதியாமல்
தெரிவையர்க ளாசைமிஞ்சி வெகுகவலை யாயுழன்று
திரியுமடி யேனையுன்றன் அடிசேராய்

நறைத்தபஞ்சணை மிசைதனின்மணமுற
வணைத்தந்தனி லிணைமுலையெதிர்பொர
நகத்தழுந்திட வமுதிதழ்பருகியு மிடறூடே
நடித்தெழுங்குரல் குமுகுமுகுமுவென
விசைத்துநன்கொடு மனமதுமருகிட
நழுப்புநஞ்சன சிறுமிகடியாற வருள்வாயே

நிறைத்ததெண்டிரை மொகுமொகுமொகுவென
வுரைத்தகஞ்சுகி முடிநெறுநெறுவென
நிரைத்தவண்டமு கிடுகிடுகிடுவென வரைபோலும்
நிவத்ததிண்கழல் நிசிசரருரமொடு
சிரக்கொடுங்குவை மலைபுரைதரவிரு
நிணக்குழம்பொடு குருதிகள் சொரிதர வடிதீரா

திறற்கருங்குழ லுமையவளருளுறு
புழைக்கைமும்மத கயமுகமிகவுள
சிவக்கொழுந்தன கணபதியுடன்வரு மிளையோனே
சினத்தொடுஞ்சம ணுதைபடநிறுவிய
பரற்குளன்புறு புதல்வநன்மணியுரு
திருப்பரங்கிரி தனிலுறைசரவண பெருமானே.

உரகபட மேல்வளர்ந்த பெரியபெரு மாளரங்கர்
உலகளவு மால்மகிழ்ந்த மருகோனே
உபயகுல தீபதுங்க விருதுகவி ராஜசிங்க
உறைபுகலி யூரிலன்று வருவோனே

பரவைமனை மீதிலன்று ஒருபொழுது தூதுசென்ற
பரமனரு ளால்வளர்ந்த குமரேசா
பகையசுரர் சேனைகொன்று அமரர்சிறை மீளவென்று
பழனிமலை மீதில்நின்ற பெருமாளே

(உ௯) தனத்த தானன தனதன தனதன தனதான

அருத்தி வாழ்வொடு தனகிய மனைவியும் உறவோரும்
அடுத்த பேர்களு மிதமுறு மகவொடு வளநாடும்
தரித்த வூருமெ யெனமன நினைவது நினையாதுன்
தனைப்ப ராவியும் வழிபடு தொழிலது தருவாயே
எருத்தி லேறிய இறையவர் செவிபுக உபதேசம்
இசைத்த நாவின இதணுறு குறமகள் இருபாதம்
பரித்த சேகர மகபதி தரவரு தெய்வயானை
பதிக்கொ ளாறிரு புயபழ நியிலுறை பெருமாளே

(உரு) தனனதன தான தந்த தனதான

உலகபசு பாச தொந்த மதுவான
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்
மலசலசு வாச சஞ்ச லமதாலென்
மதிநிலைகெ டாம லுன்றன் அருள்தாராய்
சலமருகு பூளை தும்பை யணிசேயே
சரவணப வாமு குந்தன் மருகோனே
பலகலைசி வாக மங்கள் பயில்வோனே
பழனிமலை வாழ வந்த பெருமாளே.

(உசா) தனதனன தனதனன தானத் தானத் தனதான

ஒருபொழுது மிருசரண நேசத் தேவைத் துணரேனே
உனதுபழ நிமலையெனு மூரைச் சேவித் தறியேனே
பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே
பிறவியற நினைகுவனெ னாசைப் பாடைத் தவிரேனோ
துரிதமிடு நிருதர்புர சூறைக் காரப் பெருமாளே
தொழுதுவழி படுமடியர் காவற்காரப் பெருமாளே
விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே
விறன்மறவர் சிறுமிதிரு வேளைக் காரப் பெருமாளே

(உஎ) தனதனதத் தனதனதத் தனதனதத் தனதான

இடமிலிசற் குணமிலிநற் றிறமிலியற் புதமான
செயலிலிமெய்த் தவமிலிநற் செபமிலிசொர்க் கமுமீதே
இடமிலிகைக் கொடையிலிசொற் கியல்பிலிநற் றமிழ்பாட
இருபதமுற் றிருவினையற் றியல்கதியைப் பெறவேணும்
கெடுமதியுற் றிடுமசுரக் கிளைமடியப் பொரும்வேலா
கிரணகுறைப் பிறையறுகக் கிதழ்மலர்கொக் 'கிறகோடே
படர்சடையிற் புனைநடனப் பரமர்தமக் கொருபாலா
பலவயலிற் றரளநிரைப் பழநிமலைப் பெருமாளே

(உஅ) தனதனன தாத்த தனதான

வசனமிக வேற்றி மறவாதே
மனதுதுய ராற்றில் உழலாதே
இசைபயில்ச டாக்ஷ ரமதாலே
இகபரசௌ பாக்யம் அருள்வாயே
பசுபதிசி வாக்யம் உணர்வோனே
பழநிமலை வீற்ற ருளும்வேலா
அசுரர்கிளை வாட்டி மிகவாழ
அமரர்சிறை மீட்ட பெருமாளே

(௨௬) தனனு தனனு தனதான

வாதா மணிநீ யெனவோரில்
வருகா தெதுதான் அதில் வாரா

திரதா திகளால் நவலோகம்
இடவேகரியாம் இதிலேது

சாதா மறையோ தயன்மாலும்
சகலா கமநூ லறியாத

பாதே வதையாள் தருசேயே
பழனு புரிவாழ் பெருமாளே

(௨௭) தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன தனதான

மலரணி கொண்டைச் சொருக்கி லேயவள்
சொலுமொழி யின்பச் செருக்கி லேகொடு
மையுமடர் நெஞ்சத் திருக்கி லேமுக மதியாலே
மருவுநி தம்பத் தடத்தி லேநிறை
பரிமள கொங்கைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத் திடத்தி லேவிழி வலையாலே



நிலவெறி யங்கக் குலுக்கி லேயெழில்
வளைபுனை செங்கைக் கிலுக்கி லேகன
நிதிபறி யந்தப் பிலுக்கி லேசெயும் ஒயிலாலே
நிதமிய லுந்தூர்க் குணத்தி லேபர
வசமுட னன்புற் றிணக்கி லேயொரு
நிமிஷமி ணங்கிக் கணத்தி லேவெகு மதிகேடாய்

அலையநி னைந்துற் பனத்தி லேயனு
தினமிகு மென்சொற் பனத்தி லேவர
அறிவும ழிந்தற் பனத்தி லேநிதம் உலைவேனோ
அசடனை வஞ்சச் சமர்த்த னாகிய
கசடனை யுன்சிற் கடைக்க ணாடியும்
அலர்கொடு நின்பொற் பதத்தையே தொழ
அருள்தாராய்

பலபல பைம்பொற் பதக்க மாரமும்
அடிமைசொ லுஞ்சொற் றமிழ்ப்ப நீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப மாலையும் அணிவோனே
பதியினின் மங்கைக் கதித்த மாமலை
யொடுசில குன்றிற் றரித்து வாழ்வுயர்
பழனியி லன்புற் றிருக்கும் வானவர் பெருமாளே

# திருவேரகம்—(சுவாமிமலை)

(௫௧) தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதான

குமர குருபர முருக சரவண
குகசண் முககரி பிறகான
குழக சிவசுத சிவய நமவென
குரவ னருள்குரு மணியேயென்
றமுத மிமையவர் திமிர்த மிடுகட
லதென அநுதினம் உனையோதும்
அமலை யடியவர் கொடிய வினைகொடும்
அபய மிடுகுரல் அறியாயோ
திமிர வெழுகட லுலக முறிபட
திசைகள் பொடிபட வருசூரர்
சிகர முடியுடல் புவியில் விழவுயர்
திறைகொ டமர்பொரு மயில்வீரா
நமனை யுயிர்கொளு மழலி னிணைகழல்
நதிகொள் சடையினர் குருநாதா
நளின குருமலை மருவி யமர்தரு
நவிலு மறைபுகழ் பெருமாளே

(௫௨) தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த தனதான

செகமாயை யுற்றெ னகவாழ்வில் வைத்த
திருமாது கெர்ப்பம் உடலூறித்
தெசமாத முற்றி வடிவாய்நி லத்தில்
திரமாய ளித்த பொருளாகி

மகவாவி னுச்சி விழியான னத்தில்
மலைநேர்பு யத்தில் உறவாடி
மடிமீத டுத்து விளையாடி நித்த
மணிவாயில் முத்தி தரவேணும்

முகமாய மிட்ட குறமாதி னுக்கு
முலைமேல ணைக்க வருநீதா
முதுமாம றைக்கு ளொருமாபொ ருட்குள்
மொழியேயு ரைத்த குருநாதா

தகையாதெ னக்கு னடிகாண வைத்த
தனியேர கத்தில் முருகோனே
தருகாவி ரிக்கு வடபாரி சத்தோர்
சமர்வேலெ டுத்த பெருமாளே

(ருரு) தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த தனதான

மருவே செறித்த குழலார் மயக்கி
மதனு கமத்தின் விரகாலே
மயலே யெழுப்பி யிதமே யருத்த
மலைபோல் முலைக்குள் உறவாகிப்

பெருகாத லுற்ற தமியேனை நித்தல்
பிரியாது பட்ச மறவாதே
பிழையே பொறுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற அருள்வாயே

குருவா யரற்கு முபதேசம் வைத்த
குகனே குறத்தி மணவாளா
குளிர்கா மிகுத்த வளர்பூக மெத்து
குடகா விரிக்கு வடபாலார்

திருவே ரகத்தி லுறைவா யுமைக்கொர்
சிறுவா கரிக்கும் இளையோனே
திருமால் தனக்கு மருகா அரக்கர்
சிரமே துணித்த பெருமானே

(௬௪) தனனா தனத்த தந்த தனனா தனத்த தந்த
தனனா தனத்த தந்த தனதான

விழியால் மருட்டி நின்று முலைதூ சகற்றி மண்டு
விரகான லத்த ழுந்த நகையாடி
விலையா கமிக்க செம்பொன் வரவே பரப்பி வஞ்ச
விளையா டலுக்கி சைந்து சிலநாள்மேல்

மொழியாத சொற்கள் வந்து சிலுகாகி விட்ட தொந்த
முழுமாயை யிற்பி ணங்கள் வசமாகி
முடியாது பொற்ச தங்கை தருகீத வெட்சி துன்று
முதிராத நற்ப தங்கள் தருவாயே

பொழிகார் முகிற்கி ணைந்த யமராஜ னுட்க வன்று
பொருதா ளெடுத்த தந்தை மகிழ்வோனே
புருகூத னுட்கு ளிர்ந்த கனகா புரிப்ர சண்ட
புனிதா ம்ருகக்க ரும்பு புணர்மார்பா

செழுவா ரிசத்தி லொன்று முதுவே தன்வெட்க வன்று
திருவாய் மைசெப்பி நின்ற முருகோனே
திரளா மணிக்கு லங்கள் அருணோ தயத்தை வென்ற
திருவே ரகத்த மர்ந்த பெருமாளே

(௫௫) தனதன்ன தான தத்த தன்தன்ன தான தத்த
தனதன்ன தான தத்த தனதான

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம்வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்மயக்கம் உறுவேனோ

கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளைசெப்பு
கயிலைமலை நாதர்பெற்ற குமரோனே
கடகபுய மீதிரத்ந மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார்கடப்பம் அணிவோனே

தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வு
தகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணுநெய்த்த வடிவேலா

அருணதள பாதபத்ம மதுநிதமு மேதுதிக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா
அதிசயம நேகமுற்ற பழனிமலை மீதுதித்த
அழகதிரு வேரகத்தின் முருகோனே

(௩௬) தான தந்ததந்த தனதான

காமி யத்தழுந்தி யிளையாதே
காலர் கைப்படிந்து மடியாதே
ஓமெ ழுத்திலன்பு மிகவூறி
ஒவி யத்திலந்தம் அருள்வாயே
தூம மெய்க்கணிந்த சுகலீலா
சூர னைக்கடிந்த கதிர்வேலா
ஏம வெற்புயர்ந்த மயில்வீரா
ஏர கத்தமர்ந்த பெருமாளே

(௩௭) தனதன தனன தனன
தனந் தனத்த தனதான

தெருவினில் நடவா மடவார்
திரண் டொருக்கும் வசையாலே
தினகர னெனவே லையிலே
சிவந் துதிக்கும் மதியாலே
பொருசிலை வளையா இளையா
மதன் தொடுக்குங் கணையாலே
புளகித முலையா லலையா
மனஞ் சலித்தும் விடலாமோ

ஒருமலை யிருகூ றெழவே
யுரம் புகுத்தும் வடிவேலா
ஒளிவளர் திருவே ரகமே
யுகந்து நிற்கும் முருகோனே

அருமறை தமிழ்நூ லடைவே
தெரிந்து ரைக்கும் புலவோனே
அரியரி பிரமா தியர்கால்
விலங் கவிழ்க்கும் பெருமாளே

(௫அ) தானதந் தனதனன தனன
தானத்ததந்த தனதான

நாசர்தங் கடையதினில் விரவி
நான் மெத்த நொந்து தடுமாறி
ஞானமுங் கெடவடைய வழுவி
யாழத்தழுந்தி மெலியாதே

மாசகந் தொழுமுனது புகழினோர்
சொற்பகர்ந்து சுகமேவி
மாமணங் கமழுமிரு கமல
பாதத்தை நின்று பணிவேனோ

வாசகம் புகலவொரு பரமர்
தாமெச்சுகின்ற குருநாதா
வாசவன் தருதிருவை யொருதெய்
வானைக்கிரங்கு மணவாளா

சீகஞ் சுரர்தருவு மகிழு
மாவத்திசந்து புடைசூழுங்
கேசவன் பரவுகுரு மலையில்
யோகத்தமர்ந்த பெருமாளே

(நஉ) தன தண தன தன தன தான

நிறைமதி முகமெனும் ஒளியாலே
நெறிவிழி கணைபுரி நிகராலே
உறவுகொள் மடவர்கள் உறவாமோ
உனதிரு வடியினி யருள்வாயே
மறைபயி லரிதிரு மருகோனே
மருவல ரசுரர்கள் குலகாலா
குறமகள் தனைமணம் அருள்வோனே
குருமலை மருவிய பெருமாளே

(சய) தான தனதன தான தனதன
தான தனதன தனதான

பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா

காது மொருவிழி காக முறவருள்
மாய னதுதிரு மருகோனே
கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே

ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வரவரும் இளையோனே

சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனில் உறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே

(சக) தான தன தான தந்த தான தன தான தந்த
தான தன தான தந்த தன தான

வாதமொடு சூலைகண்ட மாலைகுலை நோவுசந்து
மாவலிவி யாதிகுன்ம மொடுகாசம்
வாயுவுட னேபரந்த தாமரைகள் பீனசம்பின்
மாதர்தரு பூஷணங்கள் எனவாகும்

பாதகவி யாதிபுண்கள் ஆனதுட னேதொடர்ந்து
பாயலைவி டாதுமங்க இவையால்நின்
பாதமல ரானதின்க ணேயமற வேமறந்து
பாவமது பானமுண்டு வெறியூடி

ஏதமுறு பாசபந்த மானவலை யோடுழன்று
ஈனமிகு சாதியின்க ணதிலேயான்
ஈடழித லானதின்பின் மூடனென வோதுமுன்புன்
ஈர அருள் கூரவந்து எனையாள்வாய்

சூதமகிழ் பாலைதெங்கு தாதுவளர் சோலைமுன்பு
சூழுமதில் தாவிமஞ்சின் அளவாகத்
தோரணநன் மாடமெங்கு நீடுகொடி யேதழைந்த
ஸ்வாமிமலை வாழவந்த பெருமாளே

(சஉ) தானதனத் தனதான தானதனத் தனதான

காலனிடத் தணுகாதே காசினியிற் பிறவாதே
சீலவகத் தியஞான தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே மாதவரைப் பிரியானே
சோலைமலைக் குரியானே ஸ்வாமிமலைப் பெருமாளே.

## குன்றுதோருடல்.

(சந) தந்தன தான தான தந்தன தான தான
தந்தன தான தான தனதான

வஞ்சக லோபமூடர் தம்பொரு ளூர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் பாரி காரி யென்றிசை வாது கூறி
வந்தியர் போல வீணில் அழியாதே

செஞ்சர ணாத கீத கிண்கிணி நீப மாலை
திண்டிறல் வேல்ம யூர முகமாறும்
செந்தமிழ் நாளு மோதி உய்ந்திட ஞான மூறு
செங்கனி வாயி லோர்சொல் அருள்வாயே

பஞ்சவ ரீடு கூறு மொன்றிடு தாப மோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்
பண்பறு பீலியோடு வெங்கழு வேற வோது
பண்டித ஞான நீறு தருவோனே

குஞ்சரம் யாளிமேவு பைம்புன மீது லாவு
குன்றவர் சாதி கூடி வெறியாடிக்
கும்பிட நாடி வாழ்வு தந்தவ ரோடு வீறு
குன்றுதொ ருடல் மேவு பெருமாளே

(௪௪) தனன தனன தந்த தனதான

அதிருங் கழல்ப ணிந்துன் அடியேனுன்
அபயம் புகுவ தென்று நிலைகாண
இதயந் தனிலி ருந்து க்ருபையாகி
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே
எதிரங் கொருவ ரின்றி நடமாடும்
இறைவன் தனது பங்கில் உமைபாலா
பதியெங் கிலுமி ருந்து விளையாடிப்
பலகுன் றிலுமமர்ந்த பெருமாளே

## கயிலைமலை.

(சஈ) தனத்தத் தனத்த தத்த
தனத்தத் தனத்த தத்த
தனத்தத் தனத்த தத்த தனதான

முகத்தைப் பிலுக்கி மெத்த
மினுக்கித் துடைத்து ரத்ந
முலைக்கச் சவிழ்த்த சைத்து முசியாதே
முழுக்கக் கழப்பி யெத்தி
மழுப்பிப் பொருட்ப றித்து
மொழிக்குட் படுத்த ழைத்த மளிமீதே

நகைத்திட் டழுத்தி முத்தம்
அளித்துக் களித்து மெத்த
நயத்திற் கழுத்தி றுக்கி யணைவார்பால்
நடுக்குற் றவுர்க்கு மெத்த
மனத்தைப் பெருக்க வைத்து
நயத்துத் தியக்கி நித்தம் அழிவேனோ

செகக்கச் செகக்க செக்க
தரிக்கத் தரிக்க தக்க
திமித்தித் திமித்தி தித்தி யெனவாடும்
செகத்துக் கொருத்தர் புத்ர
நினைத்துத் துதித்த பத்த
செனத்துக் கினித்த சித்தி யருள்வோனே

மிசைத்துத் திடத்தொ டுற்று
அசைத்துப் பொறுத்த ரக்கன்
மிகுத்துப் பெயர்த்தெ டுத்த கயிலாய
மிசைக்குற் றடுத்து யர்த்த
பொருப்பைப் பொடித் திடித்து
மிதித்துத் துகைத்து விட்ட பெருமாளே

(௬௬) தனன தனத் தன தான தனன தனத் தன தான

புமியதனிற் ப்ரபுவான புகலியில்வித் தகர்போல
அமிர்தகவித் தொடைபாட அடிமைதனக் கருள்வாயே
சமரிலெதிர்த் தசுர்மாளத் தனியயில்விட் டருள்வோனே
நமசிவயப் பொருளானே ரசதகிரிப் பெருமாளே

# ஸ்ரீ சைலம்.

(சஎ) தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான

ஒருபது மிருபது மறுபது முடனாறும்
உணர்வுற இருபதம் உளநாடி
உருகிட முழுமதி தழலென வொளிதிகழ்
வெளியொடு மொளிபெற விரவாதே

தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து
திரிதொழி லவமது புரியாதே
திருமகள் மருவிய திரள்புய அறுமுக
தெரிசனை பெறவருள் புரிவாயே

பரிவுடனழகிய பழமொடு கடலைகள்
பயறொடு சிலவகை பணியாரம்
பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி
எழுதிய கணபதி யிளையோனே

பெருமலை யுருவிட அடிமலர் பணிபவர்
பிணிகெட அருள்தரு குமரேசா
பிடியொடு களிறுகள் நடையயில் கலைதிரள்
பிணையமர் திருமலைப் பெருமாளே

# திருத்தணிகை.

(சஅ) தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

அமைவுற் றடையப் பசியுற் றவருக்
கமுதைப் பகிர்தற் கிசையாதே
அடையப் பொருள்கைக் களவைக் கெனவைத்
தருள்தப் பிமதத் தயராதே
தமர்சுற் றியழப் பறைகொட் டியிடச்
சமனெட் டுயிரைக் கொடுபோகுஞ்
சரிரத் தினைநிற் குமெனக் கருதித்
தளர்வுற் றொழியக் கடவேனோ
இமயத் துமயிற் கொருபக் கமளித்
தவருக் கிசையப் புகல்வோனே
இரணத் தினிலெற் றவரைக் கழுகுக்
கிரையிட் டிடுவிக் ரமவேலா
சமயச் சிலுக்கிட் டவரைத் தவறித்
தவமுற் றவருட் புகநாடும்
சடுபத் மமுகக் குகபுக் ககனத்
தணியிற் குமரப் பெருமாளே

(சகூ) தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

பொரியப் பொரியப் பொலிமுத் துவடத்
துகளிற் புதையத் தனமீதே
புரளப் புரளக் கறுவித் தறுகட்
பொருவிற் சுறவக் கொடிவேடோள்

தெரிவைக் கரிவைப் பரவைக் குருகிச்
செயலற் றனள்கற் பழியாதே
செறிவுற் றணையிற் றுயிலுற் றருமைத்
தெரிவைக் குணர்வைத் தரவேணும்

சொரிகற் பகநற் பதியைத் தொழுகைச்
சுரருக் கருளைப் புரிவோனே
சுடர்பொற் கயிலைக் கடவுட் கிசையச்
சுருதிப் பொருளைப் பகர்வோனே

தரிகெட் டசுரப் படைகெட் டொழியத்
தனிநெட் டயிலைத் தொடும்வீரா
தவளப் பணிலத் தரளப் பழனத்
தணிகைக் குமரப் பெருமாளே

(௫௦) தனத்தன தானந் தனத்தன தானந்
தனத்தன தானந் தனதான

எனக்கென யாவும் படைத்திட நாளும்
இளைப்பொடு காலந் தனிலேயா
எடுத்திடு காயந் தனைக்கொடு மாயும்
இலச்சையி லாதென் பவமாற

உனைப்பல நாளும் திருப்புக ழாலும்
உரைத்திடு வார்தங் குழுமேவி
உணர்த்திய போதந் தனைப்பிரி யாதொண்
பொலச்சர ணனுந் தொழுவேனோ

வினைத்திற மோடன் றெதிர்த்திடும் வீரன்
விழக்கொடு வேல்கொண் டவனீயே
விளப்பென வேறொன் றிடக்கய னாரும்
விருப்புற வேதம் புகல்வோனே

சினத்தொடு சூரன் தனைப்பொரு போரின்
சிரத்தினை மாறும் முருகோனே
தினைப்புன மேவுங் குறக்கொடி யோடுந்
திருத்தணி மேவும் பெருமாளே

(ருக) தனத்தன தனத்தந் தனத்தன தனத்தந்
தனத்தன தனத்தந் தனதான

ஙரிக்குழல் விரித்தும் புறக்கயல் விழித்துங்
கரிக்குவ டிணைக்குந் தனபாரக்
கரத்திடு வளைச்சங் கிலிச்சர மொழித்துங்
கலைத்துகில் மினுக்கும் பணிவாரைத்

தரித்துள மழிக்குக் கவட்டர்க ளிணக்கந்
தவிர்த்துன துசித்தங் களிகூரத்
தவக்கடல் குளித்திங் குனக்கடி மையுற்றுன்
தலத்தினி லிருக்கும் படிபாராய்

புரத்தையு மெரித்தங் கயத்தையு முரித்தொண்
பொடிப்பணி யெனப்பன் குருநாதா
புயப்பணி கடப்பந் தொடைச்சிக ரமுற்றின்
புகழ்ச்சிய முகத்திண் புலவோனே

திரட்பரி கரிக்கும் பொடிப்பட வுணர்க்குந்
தெறிப்புற விடுக்குங் கதிர்வேலா
சிறப்பொடு குறப்பெண் களிக்கும்வி சயத்தென்
திருத்தணி யிருக்கும் பெருமாளே

(௫௨) தனத்த னத்தன தனதன தனதன
தனத்த னத்தன தனதன தனதன
தனத்த னத்தன தனதன தனதன தனதான

சினத்தி லத்தினை சிறுமண லளவுடல்
செறித்த தெத்தனை சிலைகட லினிலுயிர்
செனித்த தெத்தனை திரள்கய லெனபல வதுபோதா
சென்மித்த தெத்தனை மலைசுனை யுலகிடை
செழித்த தெத்தனை சிறுதன மயல்கொடு
செடத்தி லெத்தனை நமனுயிர் பறிகொள்வ தளவேதோ

மனத்தி லெத்தனை நினைகவ டுகள்குடி
கெடுத்த தெத்தனை மிருகம தெனவுயிர்
வதைத்த தெத்தனை யளவிலை விதிகரம் ஒழியாமல்
வகுத்த தெத்தனை மசகனை முருடனை
மடைக்கு லத்தனை மதியழி விரகனை
மலர்ப்ப தத்தினி லுருகவு மினியருள் புரிவாயே

தனத்த னத்தன தனதன தனதன
திமித்தி மித்திமி திமிதிமி திமிதிமி
தகுத்த குத்தகு தகுதகு தகுதகு தகுதீதோ
தரித்த ரித்தரி தரிரிரி ரிரிரிரி
தடுட்டு டுட்டுடு டுடுடுடு டுடுடுடு
தமித்த மத்தள தமருக விருதொலி கடல்போலச்

சினத்த மர்க்கள மிசைதிகழ் குருதிய
திமிழ்த்தி டக்கரி யசுரர்கள் பரிசிலை
தெறித்த டக்கழு நரிதின நிணமிசை பொரும்வேலா
செழிக்கு முத்தம சிவசா ணர்கள்தவ
முநிக்க ணத்தவர் மதுமலர் கொடுபணி
திருத்தணிப்பதி மருவிய குறமகள் பெருமாளே

ருரு. தனதன தான தனதன தான
தனதன தான தனதான

இருமலு ரோக முயலகன் வாதம்
எரிகுண நாசி விடமேநீ
ரிழிவுவி டாத தலைவலி சோகை
யெழுகள மாலை இவையோடே
பெருவயி றீளை யெரிகுலை சூலை
பெருவலி வேறு முளநோய்கள்
பிடவிக டோறு மெனைநலி யாத
படியுன தாள்கள் அருள்வாயே
வருமொரு கோடி யசுரர்ப தாதி
மடியவ நேக இசையாடி
வருமொரு கால வயிரவ ராட
வடிசுடர் வேலை விடுவோனே

௵ அருணகிரிநாதர் அருளிச்செய்த

தருநிழல் மீதி லுறைமுகி லூர்தி
தருதிரு மாதின் மணவாளா
சலமிடை பூவி னடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே

(௵) தனதன தானந் தனதன தானந்
தனதன தானந் தனதான

கலைமட வார்தஞ் சிலையத னாலுங்
கனவளை யாலுங் கரைமேலே
கருகிய காளம் பெருகிய தோயங்
கருதலை யாலுஞ் சிலையாலும்

கொலைதரு காமன் பலகணை யாலுங்
கொடியிடை யாள்நின் றழியாதே
குரவணி நீடும் புயமணி நீபங்
குளிர்தொடை நீதந் தருள்வாயே

சிலைமகள் நாயன் கலைமகள் நாயன்
திருமகள் நாயன் தொழும்வேலா
தினைவன மானுங் கநவன மானுஞ்
செறிவுடன் மேவுந் திருமார்பா

தலமகள் மீதெண் புலவரு லாவுந்
தணிகையில் வாழ்செங் கதிர்வேலா
தனியவர் கூருந் தனிகெட நாளுந்
தனிமயி லேறும் பெருமாளே

(ருரு) தனத்த தத்ததனத் தனதான

நினைத்த தெட்டனையிற் றவறாமல்
நிலைத்த புத்திதனைப் பிரியாமற்
கனத்த தத்துவமுற் றழியாமற்
கதித்த நித்தியசித் தருள்வாயே
மனித்தர் பத்தர்தமக் கெளியோனே
மதித்த முத்தமிழிற் பெரியோனே
செனித்த புத்திரரிற் சிறியோனே
திருத்த ணிப்பதியிற் பெருமாளே

(ருசு) தனத்தனத்தனத் தந்தனாத்தன தந்ததான

கனத்திரைக்குமிப் பொங்குபாற்கடல் ஒன்றினாலே
கருத்தறச்சிவத் தங்கிபூத்தெழு கண்களாலே
தனிக்கருப்புவிற் கொண்டுவீழ்த்தச ரங்களாலே
தனித்தொருத்திநித் தங்கலாத்தில ழுந்தலாமோ

௫௬ அருணகிரிநாதர் அருளிச்செய்த

தினைப்புனத்தினைப் பண்டுகாத்தம டந்தைபாகா
திருத்தணிப்பதிக் குன்றின்மேற்றிகழ் கந்தவேளே
பனைக்கரக்கயத் தண்டர்போற்றிய மங்கைகோவே
படைத்தனித்தழிக் குந்த்ரிமூர்த்திகள் தம்பிரானே

(௫௭) தான தத்தன தானன தானன
தான தத்தன தானன தானன
தான தத்தன தானன தானன தனதான

ஓதிவைத்தவர் கூலிகொடாதவர்
மாதவர்க்கதி பாதகமானவர்
பூசலிற்கன லாயெரிகாளையர் மறையோர்கள்
ஊர்தனக்கிட ரேசெய்வரேழையர்
ஆர்தனக்குமு தாசினமானவர்
ஓதுமுத்தம நீதியை நாடிலர் இரவோருக்

கேதுமித்தனை தானமிடாதவர்
பூதலத்தினி லோரமதானவர்
ஏதினிற்சிவ ஞானியை மோனியை யிகழ்வோரும்
ஏகசிற்றறி ஞானமிலாதவர்
யோகமற்றிடு போகிதமீறினர்
ஈனரித்தனை பேர்களுமேழ்நர குழல்வாரே

தாததத்தத தாததததாதத
தூதுதுத்துது தூதுதுதூதுது
சாசசச்சச சாசசசாசச சசசாச
டாடடட்டட டாடடடாடட
டுடுடுட்டுடு டுடுடுடுடு
டிடிடிட்டிடி டிடிடிடிடி டிடிடிடி

தீதிதித்திதி தீதிதிதீதிதி
தோதிகுத்திகு தோதிகுதோதிகு
சேகுசெக்குகு சேகுகுசேகுகு செகுசேகு
சேயெனப்பல ராடிடமாகலை
ஆயுமுத்தமர் கூறிடும்வாசகர்
சேர்திருத்தணி மாமலைமேவிய பெருமாளே

## வள்ளிமலை.

(௫அ) தையதன தான தையதனதான
தையதன தானத் தனதான

அல்லிவிழி யாலு முல்லைநகை யாலு
மல்லல்பட ஆசைக் கடலீயும்
அள்ளவினி தான நள்ளிரவு போலு
முள்ளவினை யாரத் தனமாரும்

ருஅ அருணகிரிநாதர் அருளிச்செய்த

இல்லுயிரிளை யோரு மெல்லவய லாக
வல்லெருமை மாயச் சமணரும்
எள்ளியென தாவி கொள்ளைகொளு நாளி
லுய்யவொரு நீபொற் கழல்தாராய்

தொல்லைமறை தேடி யில்லையெனு நாதர்
சொல்லுமுப தேசக் குருநாதா
துள்ளிவிளை யாடு புள்ளியுழை மேவு
வெள்ளிவன மீதுற் றுறைவோனே

வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
வல்லவடி வேலைத் தொடுவோனே
வள்ளிபடர் சாரல் வள்ளிமலை மேவு
வள்ளிமண வாளப் பெருமாளே

## திருசிராப்பள்ளி.

(ருக) தந்த தாத்தன தத்தத தானன
தந்த தாத்தன தத்தத் தானன
தந்த தாத்தன தத்தத் தானன தனதான

அங்கை நீட்டிய ழைத்துப் பாரிய
கொங்கை காட்டிம றைத்துச் சீரிய
அன்பு போற்பொய்ந டித்துக் காசள வுறவாடி

அம்பு தோற்றக ணிட்டுத் தோதக
இன்ப சாத்ரமு ரைத்துக் கோகிலம்
அன்றில் போற்குர லிட்டுக் கூரிய நகரேகை

பங்க மாக்கிய லைத்துச் சாதனை
கொண்டு வேட்கையெ ழுப்பிக் காமுகர்
பண்பில் வாய்க்கய யக்கிக் கூடுதல் இயல்பாகப்

பண்டி ராப்பகல் சுற்றுச் சூளைகள்
தங்கள் மேற்ப்ரமை விட்டுப் பார்வதி
பங்கர் போற்றிய பத்மத் தாள்தொழ அருள்வாயே

எங்கு மாய்க்குறை வற்றுச் சேதன
அங்க மாய்ப்பரி சுத்தத் தோர்பெறும்
இன்ப மாய்ப்புகழ் முப்பத் தாறினின் முடிவேறாய்

இந்த்ர கோட்டிம யக்கத் தான் மிக
மந்த்ர மூர்த்தமெ டுத்துத் தாமத
மின்றி வாழ்த்திய சொர்க்கக் காவவ வயலூரா

செங்கை வேற்கொடு துட்டச் சூரனை
வென்று தோற்பறை கொட்டக் கூளிகள்
தின்று கூத்துந டிக்கத் தோகையில் வரும்வீரா

செம்பொ னாற்றிகழ் சித்ரக் கோபுர
மஞ்சி ராப்பகல் மெத்தச் சூழ்தரு
தென்சி ராப்பளி வெற்பிற் றேவர்கள் பெருமாளே

(௯௦) தனனதன தந்த தனனதன தந்த
தனனதன தந்த தனதான

ஒருவரொடு கண்கள் ஒருவரொடு கொங்கை
ஒருவரொடு செங்கை யுறவாடி
ஒருவரொடு சிந்தை ஒருவரொடு நிந்தை
ஒருவரொடு ரண்டு முறையாரை

மருவமிக அன்பு பெருகவுள தென்று
மனநினையு மிந்த மருள்தீர
வனசமென வண்டு தனதனன வென்று
மருவுசர ணங்கள் அருளாயோ

அரவமெதிர் கண்டு நடுநடுந டுங்க
அடலிடுப்ர சண்ட மயில்வீரா
அமரர்முத லன்பர் முநிவர்கள்வ ணங்கி
அடிதொழவி ளங்கு வயலூரா

திருவையொரு பங்கர் கமலமலர் வந்த
திசைமுகன் மகிழ்ந்த பெருமானுர்
திருதகுதியென்று நடமிடமு ழங்கு
திரிசிரகல் வந்த பெருமாளே

(சூக) தனன தாத்தன தனன தாத்தன
தானா தானா தானா தானா தனதானா

குமுத வாய்க்கனி யமுத வாக்கினர்
கோலே வேலே சேலே போலே அழகான
குழைகள் தாக்கிய விழிக ளாற்களி
கூடா வீடா தீடா மாலா யவரோடே

உமது தோட்களி லெமது வேட்கையை
ஓரீர் பாரீர் வாரீர் சேரீர் எனவேநின்
றுடைதொ டாப்பண மிடைபொ ருத்தன
மூடே வீழ்வே னீடே றாதே யுழல்வேனோ

தமர வாக்கிய அமரர் வாழ்த்திய
தாதா வேதா ஞாதா வேதா கையிலேறிச்
சயில நாட்டிறை வயலி நாட்டிறை
சாவா மூவா மேவா நீவா இளையோனே

திமிர ராக்கதர் சமர வேர்களை
தீரா வீரா நேரா தாரா உமைபாலா
திரிசி ராப்பளி மலையின் மேற்றிகழ்
தேவே கோவே வேளே வானோர் பெருமாளே

(கூஉ) தனனதனனத் தனதான

பகலிரவினிற் றடுமாறு
பதிகுருவெனத் தெளிபோத
ரகசியமுரைத் தநுபூதி
ரதநிலைதனைத் தருவாயே
இகபரமதற் கிறையோனே
இயலிசையின்முத் தமிழோனே
சகசிரகிரிப் பதிவேளே
சரவணபவப் பெருமாளே

(கூந) தானத்தத் தான தானன
தானத்தத் தான தானன
தானத்தத் தான தானன தந்ததான

வாசித்துக் காணொ ணாதது
பூசித்துக் கூடொ ணாதது
வாய்விட்டுப் பேசொ ணாதது நெஞ்சினாலே
மாசர்க்குத் தோணொ ணாதது
நேசர்க்குப் போரொணாதது
மாயைக்குச் சூழொ ணாதது விந்துநாத

ஓசைக்குத் தூர மானது
மாகத்துக் கீற தானது
லோகத்துக் காதி யானது கண்டுநாயேன்
யோகத்தைச் சேரு மாறுமெய்
ஞானத்தைப் போதி யாயினி
யூனத்தைக் கீழ்வி டாதும யங்கலாமோ

ஆசைப்பட் டேனல் காவல்செய்
வேடிச்சிக் காக மாமய
லாகிப்பொற் பாத மேபணி கந்தவேளே
ஆலித்துச் சேல்கள் பாய்வய
லூரத்திற் காள மோடட
ராரத்தை பூண்ம யூரது ரங்கவீரா

நாசிக்குட் ப்ராண வாயுவை
ரேசித்தெட் டாத யோகிகள்
நாடிற்றுக் காணொ ணாதென நின்றநாத
நாகத்துச் சாகை போயுயர்
மேகத்தைச் சேர்சி ராமலை
நாதர்க்குச் சாமி யேசுரார் தம்பிரானே

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# இரத்நகிரி.

(கூச) தத்தன தானனத் தனதான

பத்தியால் யானுனைப் பலகாலும்
பற்றியே மாதிருப் புகழ்பாடி
முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்
முத்தியே சேர்வதற் கருள்வாயே
உத்தமா தானசற் குணர்நேயா
ஒப்பிலா மாமணிக் கிரிவாசா
வித்தகா ஞானசத் திநிபாதா
வெற்றிவே லாயுதப் பெருமாளே

## விநாயக மலை,

(கூரு) தனதன தானதனதன
தனதன தானதனதன
தனதன தானதனதன தனதான

சரவண சாதாநமோநம
கருணைய தீதாநமோநம
சததள பாதாநமோநம அபிராம
தருணக தீராநமோநம
நிருபமல் வீராநமோநம
சமதள வூராநமோநம சகதீச

பரமசொ ரூபாநமோநம
சுரர்பதி பூபாநமோநம
பரிமள தீபாநமோநம உமைகாளீ
பகவதி பாலாநமோநம
இகபர மூலாநமோநம
பவுருஷ சீலாநமோநம அருள்தாராய்

இரவியு மாகாசபூமியும்
விரவிய தூளேறவானவ
ரெவர்களு மீடேறஏழ்கடல் முறையேவென்
றிடர்பட மாமேருபூதர
மிடிபட வேதாளிசாசர
ரிகல்கெட மாவேகநீடெயில் விடுவேனே

மரகத ஆகாரஆயனு
மிரணிய ஆகாரவேதனும்
வசுவெனு மாகாரஈசனும் அடிபேண
மயிலுறை வாழ்வேவிநாயக
மலையுறை வேலாமகீதர
வனசரா ராதாரமாகிய பெருமாளே

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருச்செங்கோடு.

(௬௬) தந்தான தந்த தந்தான தந்த
தந்தான தந்த தனதான

அன்பாக வந்து நின்றாள்ப ணிந்து
ஐம்பூத மொன்ற நினையாமல்
அன்பால்மி குந்து நஞ்சாரு கண்க
ளம்போரு கங்கள் முலைதானும்

கொந்தேமி குந்து வண்டாடி நின்று
கொண்டாடு கின்ற குழலாரைக்
கொண்டேநி னைந்து மன்பேது மின்று
குன்றாம லைந்து அலைவேனோ

மன்றாடி தந்த மைந்தாமி குந்த
அம்பாற்க டம்பை யணிவோனே
வந்தேப ணிந்து நின்றார்ப வங்கள்
வன்பேசி னந்த வடிவேலா

சென்றேயி டங்கள் கந்தாவென் முன்பு
செஞ்சேவல் கொண்டு வரவேணும்
செஞ்சாலி கஞ்ச மொன்றாய்வ ளர்ந்த
செங்கோட மர்ந்த பெருமாளே

(கூஎ) தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

ஏறா னாலே நீறாய் மாயா
வேளே வாசக் கணையாலே

ஏயா வேயா மாயா வேயா
லாமே லோசைத் துளையாலே

மாறா யூறா யீறாய் மாலாய்
வாடா மானைக் கழியாதே

வாராய் பாராய் சேரா யானால்
வாடா நீபத் தொடைதாராய்

சீறா வீறா ஈரேழ் பார்சூழ்
சீரார் தோகைக் குமரேசா

தேவா சாவா மூவா நாதா
தீரா கோடைப் பதியோனே

வேறாய் மாறா யாறா மாசூர்
வேர்போய் வீழப் பொருதோனே

வேதா போதா வேலா பாலா
வீரா வீரப் பெருமானே

௯அ அருணகிரிநாதர் அருளிச்செய்த:

(௯அ) தான தந்த தனத்ததந்த தன தான

ஞாலமெங்கும் வளைத்தாற்று கடலாலே
நாளும்வஞ்சி யருற்றுரைக்கும் வசையாலே

ஆலமுந்து மதித்தழற்கும் அழியாதே
ஆறிரண்டு புயத்தணைக்க வருவாயே

கோலமொன்று குறத்தியைத்த மூவுமார்பா
கோடையம்ப தியுற்றுநிற்கு மயில்வீரா

காலனஞ்ச வரைத்துளைத்து முதல்வானோர்
கால்விலங்கு களைத்தறித்த பெருமாளே

(௯௯) தான தனத் தனதான தான தனத் தனதான

காலனிடத் தணுகாதே காசினியிற் பிறவாதே
சீலவகத் தியஞான தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே மாதவரைப் பிரியானே
நாலுமறைப் பொருளானே நாககிரிப் பெருமாளே

## கழுகுமலை

(௭௦) தனன தனதன தனத்த தானன
தனன தனதன தனத்த தானன
தனன தனதன தனத்த தானன தனதான

குதலை மொழியினர் நிதிக்கொள் வாரணி
முலையை விலைசெய்வார் தமக்கு மாமயல்
கொடிது கொடிததால் வருத்த மாயுறு துயராலே

மதலை மறுகிவா லிபத்தி லேவெகு
பதகர் கொடியவா ளிடத்தி லேமிக
வறுமை புகல்வதே யெனக்கு மோயினி முடியாதே

முதல வரிவிலோ டெதிர்த்த சூருடல்
மடிய அயிலையே விடுத்த வாகரு
முகிலை யனையதா நிறத்த மால்திரு மருகோனே

கதலி கமுகுசூழ் வயற்கு ளேயளி
யிசையை முரலமா வறத்தில் மீறிய
கழுகு மலைமகா நகர்க்குள் மேவிய பெருமாளே

(எக) தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன
தனதன தத்தத் தனத்த தானன தனதான

முலையைம றைத்துத் திறப்ப ராடையை
நெகிழ வுடுத்துப் படுப்பர் வாயிதழ்
முறைமுறை முத்திக் கொடுப்பர் பூமல ரணைமீதே

அலைகுலை யக்கொட் டணைப்ப ராடவர்
மனவலி யைத்தட் டழிப்பர் மால்பெரி
தவர்பொரு ளைக்கைப் பறிப்பர் வேசைகள்உறவாமோ

தலைமுடி பத்துத் தெறித்த ராவண
னுடல்துளை பட்டுத் துடிக்க வேயொரு
தனுவை வளைத்துத் தொடுத்த வாளியன் மருகோனே

கலைமதி யப்புத் தரித்த வேணிய
ருதவிய வெற்றித் திருக்கை வேலவ
கழுகு மலைக்குட் சிறக்க மேவிய பெருமானே

## வள்ளியூர்.

(எஉ) தைய தானன தனதான தைய தானன தனதான

அல்லில் நேருமின் னதுதானு மல்ல தாகிய வுடல்மாயை
கல்வி னோரஅ வழிதோறுங் கையும் நானுமுலையலாமோ
சொல்லி நேர்படு முதுசூரர் தொய்ய வூர்கெட விடும்வேலா
வல்லி மாரிரு புறமாக வள்ளி யூருறை பெருமாளே

## கதிர்காமம்.

(எங) தன தனன தான தன தனன தான
தன தனன தானத் தன தான

திருமகளுலாவு மிருபுயமுராரி
திருமருகநாமப் பெருமாள்காண்
செகதலமும்வானு மிகுதிபெறபாடல்
தெரிதருகுமாரப் பெருமாள்காண்

மருவுமடியார்கள் மனதில்விளையாடு
மரகதமயூரப் பெருமாள்காண்
மணிதரளம்வீசி யணியருவிசூழ
மருவுகதிர்காமப் பெருமாள்காண்

அருவரைகள்நீறு படவசுரர்மாள
அமர்பொருதவீரப் பெருமாள்காண்
அரவுபிறைவாரி விரவுசடைவேணி
அமலர்குருநாதப் பெருமாள்காண்

இருவினையிலாத தருவினைவிடாத
இமையவர்குலேசப் பெருமாள்காண்
இலகுசிலைவேடர் கொடியினதிபார
இருதனவிநோதப் பெருமாளே

(எச) தனனதான தத்த தனதான
தனனதான தத்த தனதான

எதிரிலாத பத்தி தனைமேவி
இனியதாணி னைப்பை யிருபோதும்
இதயவாரி திக்கு ளுறவாகி
எனதுளேசி றக்க அருள்வாயே
கதிரகாம வெற்பி லுறைவோனே
கனகமேரு வொத்த புயவீரா
மதுரவாணி யுற்ற கழலோனே
வழுதிகூனி மிர்த்த பெருமாளே

(எரு) தனந்தா தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா தனதான.

சரத்தே யுதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா யெதிர்த்தே வருகூளைச்
சரிப்போ னமட்டே விடுத்தா யடுத்தாய்
தகர்த்தா யுடற்றான் இருகூறச்

சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்
செகுத்தாய் பலத்தார் விருதாகச்
சிறைச்சே வல்பெற்றாய் வலக்கா ரமுற்றாய்
திருத்தா மரைத்தாள் அருள்வாயே!!

புரத்தார் வரத்தார் சரச்சே கரத்தார்
பொரத்தா னெதிர்த்தே வருபோது
பொறுத்தார் பரித்தார் சிரித்தா ரெரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேயின்

கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தூர்
கருத்தார் மருத்தார் மதனைக்
கரிக்கோ லவிட்டார் கணுக்கா னமுத்தே
கதிர்கா மமுற்றார் முருகோனே

(எசு) தனதன தத்தனத் தனதன தத்தனத்
தனதன தத்தனத் தனதான.

சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய
சமயபே தத்தினுக் கணுகொணு மெய்பொருட்
டருபரா சத்தியிற் பரமான

துரியமே லற்புதப் பரமஞா னத்தனிச்
சுடர்வியா பித்தநற் பதிநீடு
துகளில்சா யுச்சியக் கதியையீ றற்றசொற்
சுகசொரூ பத்தையுற் றடைவேனே

புரிசைசூழ் செய்ப்பதிக் குரியசா மர்த்யசற்
புருஷவீ ரத்துவிக் ரமசூரன்
புரளவேல் தொட்டகைக் குமரமேன் மைத்திருப்
புகழையோ தற்கெனக் கருள்வோனே

கரியயூ கத்திரட் பலவின்மீ திற்சுளைக்
கனிகள்பீ றிப்புசித் தமராடிக்
கதலிகூ தத்தினிற் பயிலுமீ ழத்தினிற்
கதிர்காமகிரிப் பெருமாளே

(எஎ) தானதன தானத் தனதான
தானதன தானத் தனதான.

மாதர்வச மாயுற் றுழல்வாரும்
மாதவமெ ணாமற் றிரிவாரும்
தீதகல வோதிப் பணியாரும்
தீநரக மீதிற் றிகழ்வாரே
நாதவொளி யேநற் குணசீலா
நாரியிரு வோரைப் புணர்வேலா
சோதிசிவ ஞானக் குமரேசா
தோமில்கதிர் காமப் பெருமாளே.

## திருக்கோணமலை.

(எஅ) தனத்த தானன தனத்தான தானன
தனத்த தானன தனத்தான தானன
தனத்த தானன தனத்தான தானன தனதான

விலைக்கு மேனியி லணிக்கோவை மேகலை
தரித்த வாடையு மணிப்பூணு மாகவெ
மினுக்கு மாதர்க ளிடைக்காம மூழ்கியெ மயலூறி
மிகுத்த காமிய னெனப்பாரு ளோரெதிர்
நகைக்க வேயுட லெடுத்தேவி யாகுல
வெறுப்ப தாகிய வுழைத்தேவி டாய்படு கொடியேனைக்

கலக்க மாகவெ மலக்கூடி லேமிகு
பிணிக்கு ளாகியெ தவிக்கா லேயுனை
கவிக்கு ளாய்சொலி கடைத்தேற வேசெயும் ஒருவாழ்வே
கதிக்கு நாயக வுனைத்தேடி யேபுக
ழுரைக்கு நாயெனை யருட்பார்வை யாகவெ
கழற்கு ளாகவெ சிறப்பான தாயருள் தாவேணும்

மலைக்கு நாயக சிவக்காமி நாயகர்
திருக்கு மாரனெ முகத்தாறு தேசிக
வடிப்ப மாதொரு குறப்பாவை யாள்மகிழ் தருவேளே
வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்
அகத்ய மாமுனி யிடைக்காடர் கீரனும்
வகுத்த பாவுறு பொருட்கோல மாய்வரு முருகோனே

நிலைக்கு நான்மறை மகத்தான பூசுரர்
திருக்கொ ணாமலை தலத்தாரு கோபுர
நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில் வருவோனே
நிகழ்த்து மேழ்பவ கடற்சூரை யாகவெ
யெடுத்த வேல்கொடு பொடித்தூ ளதாயெறி
நினைத்த காரிய மநுக்கூல மேபுரி பெருமாளே.

## திருக்காளத்தி.

(எகூ) தனத்தானத்தத் தனதான
தனத்தானத்தத் தனதான

சிரத்தானத்திற் பணியாதே
செகத்தோர்பற்றைக் குறியாதே
வருத்தாமற்றொப் பிலதான
மலர்த்தாள்வைத்தெத் தனையாள்வாய்
நிருத்தாகர்த்தத் துவநேசா
நினைத்தார் சித்தத் துறைவோனே
திருத்தாள் முத்தர்க் கருள்வோனே
திருக்காளத்திற் பெருமாளே.

## திருவருணை.

(அ0) தனதனனத் தனதான தனதனத் தனதான

இரவுபகற் பலகாலும் இயலிசைமுத் தமிழ்கூறித்
திரமதனைத் தெளிவாகத் திருவருளைத் தருவாயே
பரகருணைப் பெருவாழ்வே பரசிவதத் துவஞான
அரனருள்சற் புதல்வோனே அருணகிரிப் பெருமாளே.

(அக) தனன தனஞ தனன தனஞ
தனன தனஞ தனதான

இருவர் மயலோ அமளி விதமோ
என்ன செயலோ அணுகாத
இருடி அயன்மா லமரா ரடியா
ரிசையு மொலிதான் இவைகேளா

தொருவ னடியே னலறு மொழிதா
னொருவர் பரிவாய் மொழிவாரோ
உனது பததூள் புவன கிரிதா
னுனது கிருபா கரமேதோ

பரமகுருவா யணுவி லசைவாய்
பவன முதலா கியபூத
படையு முடையாய் சகல வடிவாய்
பழைய வடிவா கியவேலா

அரியு மயனோ டபய மெனவே
அயிலை யலைமேல் விடுவோனே
அடிமை கொடுநோய் பொடிகள் படவே
அருணகிரிவாழ் பெருமாளே

(அஉ) தனதனன தனந்த தானன தந்ததான

கடல்பரவு தரங்க மீதெழு திங்களாலே
கருதிமிக மடந்தைமார்சொல்வ தந்தியாலே
வடவனலை முனிந்து வீசிய தென்றலாலே
வயலருணை யில்வஞ்சி போதன லங்கலாமோ
இடமுமையை மணந்த நாதரி றைஞ்சும்வீரா
எழுகிரிகள் பிளந்துவீ ழஎ றிந்தவேலா
அடலசுரர் கலங்கி யோடமு னிந்தகோவே
அரிபிரம புரந்த ராதியர் தம்பிரானே

(அங) தானன தான தானன தான
தானன தான தனந்ததான

காணாத தூரம் நீணாத வாரி
காதார வார மதன்பிணாலே
காலாளும் வேளும் ஆலால நாதர்
காலால நிலாவு முனிந்துபூமேல்
நாணாளு தோகை நூலாடை சோர
நாடோர்க ளேச அழிந்துதானே
நாளுப வாத மேலாக ஆகம்
நாடோறும் வாடி மயங்கலாமோ

சோணசைலேச பூணார நீடு
தோளாறு மாறும் விளங்குநாதா
தோலாதவீர வேலாலடாத
சூராளன் மாள வெகுண்டகோவே

சோணாடர் லோகம் வாழ்மாதி யானை
தீராத காதல் சிறந்தமார்பா
தேவாதி கூடு மூவாதி மூவர்
தேவாதி தேவர் கடம்பிரானே

(அசு) தானன தனதான தனதான

கோடான மடவார்கள் முலைமீதே
கூர்வேலை யிணையான விழியூடே

ஊடாடி யவரோடும் உழலாதே
ஓர்போது திகழ்பாதம் அருள்வாயே

நீடாழி சுழல்தேசம் வலமாக
நீடோடி மயில்மீது வருவோனே

சூடான தொருசோதி மலைமேவு
சோணாடு புகழ்தேவர் பெருமாளே.

(அரு) தாந தாந தாந தாந
தாந தாந தானத் தனதான

பாலாய் நூலாய் தேனாய் நீளாய்
பாகாய் வாய்சொற் கொடியார்தாம்
பாடா வாடா வேடா வாலே
பாடா யீடற் றிடைபீறும்

தோலா லேகா லாலே யூனா
லேசூழ் பாசக் குடில்மாசு
தேயா மாயா வோயா நோயால்
சோர்வாய் மாளக் கடவேனோ

ஞாலா மேலா வேதா போத
நாதா சோதிக் கிரியோனே
ஞான சாரா வானாள் கோனே
நான வேதப் பொருளோனே

வேலா பாலா சீலா காரா
வேளே வேடக் கொடிகோவே
வீராதாரா ஆறு தாரா வீரா வீரப் பெருமாளே

(அகூ) தான தத்த தான தனா தனாதன
தான தத்த தான தனா தனாதன
தான தத்த தான தனா தனாதன தனதான

சீர்சி றக்கு மேனி பசேல் பசேலென
நூபு ரத்தி னோசை கலீர் கலீரென
சேர விட்ட தாள்கள் செவேல் செவேலென வருமானார்
சேக ரத்தின் வாலை சிலோர் சிலோர்களும்
நூறு லக்ஷ கோடி மயால் மயால் கொடு
தேடி யொக்க வாடி யையோ வையோவென மடமாதர்
மார்ப டைத்த கோடு பளீர் பளீரென
ஏம லித்தெ னாவி பகீர் பகீரென
மாம சக்கி லாசை யுளோ முளோமென நினைவோடி
வாடை பற்று வேளை அடா அடாவென
நீம யக்க மேது சொலாய் சொலாயென
வாரம் வைத்த பாத மிதோ விதோவென அருள்வாயே
பார தத்தை மேரு வெளீ வெளீதிகழ்
கோடொ டித்த நாளில் வரைஇ வரைஇபவர்
பாணி றக்க ணேசர் குவா குவாகனர் இளையோனே
பாடன் முக்ய மாது தமிழ் தமிழிறை
மாமு னிக்கு காதி லுணர் லுணர்விடு
பாச மற்ற வேத குரூ குரூபர குமரேசா

போர்மி குத்த சூான் விடோம் விடோமென
நேரொ திர்க்க வேலை படர் படரொன
போய றுத்த போது குபீர் குபீரென வெகுசோரி
பூமி யுக்க வீசு குகா குகா திகழ்
சோலை வெற்பின் மேவு தெய்வா தெய்வானைதோள்
பூணி யிச்சை யாறு புயா புயாறுள பெருமாளே

(அஎ) தனன தனதன தனத்தத் தாத்த
தனன தனதன தனத்தத் தாத்த
தனன தனதன தனத்தத் தாத்த தனதான

அழகு தவழ் குழல் விரித்துக் காட்டி
விழிகள் கடையிணை புரட்டிக் காட்டி
அணிபொ னணிகுழை புரித்துக் காட்டி யதுாாக
அவச இதமொழி படித்துக் காட்டி
அதர மழிதுவர் வெளுப்பைக் காட்டி
அமர்செய் நகநுதி யழுத்தைக் காட்டி யணியாசம்
ஒழுகு மிருதன மசைத்துக் காட்டி
எழுத வரியிடை வளைத்துக்காட்டி
யுலவு முடைதனை நெகிழ்த்துக் காட்டி யுறவாடி
உருகு மவயவ மொழித்துக் காட்டி
உபய பரிபுர பதத்தைக் காட்டி
யுயிரை விலைகொளு மவர்க்குத் தேட்டம் ஒழிவேனோ

முழுகு மருமறை முகத்துப் பாட்டி
கொழுநர் குடுமியை யறுத்துப் போட்ட
முதல்வ குகைபடு திருப்பொற் கோட்டு     முனிநாடா
முடுகு முதலையை வரித்துக் கோட்டி
அடியர் தொழுமக வழைத்துக் கூட்டி
முறைசெய் தமிழினை விரித்துக் கேட்ட     முதுநீதர்

பழைய கடதட முகத்துக் கோட்டு
வழுவை யுரியணி மறைச்சொற் கூட்டு
பரமர் பகிரதி சடைக்குட் சூட்டு     பரமேசர்
பணிய வருள்சிவ மயத்தைக் காட்டு
குமர குலமலை யுயர்த்திக் காட்டு
பரிவொ டணிமயில் நடத்திக் காட்டு     பெருமாளே

(அஅ)   தான தனத் தன தனன   தன தான

ஈனமிகுத் துளபிறவி     யணுகாதே
யானுமுனக் கடிமையென     வகையாக
ஞான அருட் டனையருளி     வினைதீர
நாணமகற் றியகருணை     புரிவாயே
தானதவத் தினின்மிகுதி     பெறுவோனே
சாரதியுத் தமிதுணைவ     முருகோனே
ஆனதிருப் பதிகமருள்     இளையோனே
ஆறுதிருப் பதியில்வளர்     பெருமாளே

## மதுரை.

(அகூ) தனதான தானத் தனதான
தனதான தானத் தனதான

கலைமேவு ஞானப் பிரகாச
கடலாடி ஆசைக் கடலேறிப்
பலமாய வாதிற் பிறழாதே
பதிஞான வாழ்வைத் தருவாயே
மலைமேவு மாயக் குறமாதின்
மணமேவு வாலக் குமரேசா
சிலைவேட சேவற் கொடியோனே
திருவால வாயிற் பெருமாளே

---

## காசி.

(கூ) தானதந்ததனதன தனதான

வேளமுண்ட விளாகனி யதுபோல
மேனிகொண்டுவியாபக மயலூறி
நாளுமிண்டர்கள் போல்மிக அயர்வாகி
நானுநைந்துவிடாதருள் புரிவாயே
மான அன்ற மணீசர்கள் கழுவேற
வாதில்வென்றசிகாமணி மயில்வீரா
காளகண்டனுமாபதி தருபாலா
காசிகங்கையில்மேவிய பெருமாளே

அகூ அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருவாலங்காடு.

(கக) தனதன தானந் தாத்த
தனதன தானந் தாத்த
தனதன தானந் தாத்த தனதான

வடிவது நீலங் காட்டி
முடிவுள காலன் கூட்டி
வாவிடு தூதன் கோட்டி விடுபாசம்
மகனொடு மாமன் பாட்டி
முதலுற வோருங் கேட்டு
மதிகெட மாயந் தீட்டி யுயிர்போமுன்

படிமிசை தாளுங் காட்டி
யுடலுறு நோய்பண் டேற்ற
பழவினை பாவந் தீர்த்துன் அடியேனைப்
பரிவொடு நாளுங் காத்து
விரிதமி ழாலங் கூர்த்த
பாபுகழ் பாடென் றாட்கொ டருள்வாயே

முடிமிசை சோமன் சூட்டி
வடுவுள ஆலங் காட்டில்
முதிர்நட மாடுங் கூத்தர் புதல்வோனே
முருகவிழ் தாருஞ் சூட்டி
யொருதனி வேழங் கூட்டி
முதல்மற மானின் சேர்க்கை மயல்கூர்வ்ே
இடியென வேகங் காட்டி
நெடிதரு சூலந் தீட்டி
யெதிர்பொரு சூரன் தாக்க வாவேகி
இலகிய வேல்கொண் டார்த்து
உடலிரு கூறன் ருக்கி
யிமையவ ரேதந் தீர்த்த பெருமாளே

## திருமயிலை.

(கஉ) தனனத் தனதன தனதான

அயிலொத் தெழுமிரு விழியாலே
அமுதொத் திடுமரு மொழியாலே
சயிலத் தெழுதுணை முலையாலே
தடையுற் றடியனு மடிவேனோ
கயிலைப் பதியரன் முருகோனே
கடலக் கரைதிரை யருகேசூழ்
மயிலைப் பதிதனில் உறைவோனே
மகிமைக் கடியவர் பெருமாளே

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# சிதம்பரம்.

(கூஉ) தனனதன தான தனனதன தான
தனனதன தானத் தனதானு

கனகசபை மேவு மெனதுகுரு நாத
கருணைமுரு கேசப் பெருமாள்காண்
கனகநிற வேத னபயமிட மோது
கரகமல சோதிப் பெருமாள்காண்

வினவுமடி யாரை மருவிவிளை யாடு
விரகுரச மோகப் பெருமாள்காண்
விதிமுனிவர் தேவ ரருணகிரி நாதர்
விமலசர சோதிப் பெருமாள்காண்

சனகிமண வாளன் மருகனென வேத
சதமகிழ்கு மாரப் பெருமாள்காண்
சரணசிவ காமி யிரணகுல காரி
தருமுருக நாமப் பெருமாள்காண்

இனிதுவன மேவு மமிர்தகுற மாதொ
டியல்பரவு காதற் பெருமாள்காண்
இணையிலிப தோகை மதியின்மக ளோடு
மியல்புலியூர் வாழ்பொற் பெருமாளே

(கச) தனதனன தனன தந்தத் தனதான

இருவினையின் மதிமயங்கித் திரியாதே
எழுநரகி லுழலு நெஞ்சுற் றலையாதே
பரமகுரு அருள் நினைந்திட் டுணர்வாலா
பரவுதரி சனையை யென்றெற் கருள்வாயே
தெரிதமிழை யுதவு சங்கப் புலவோனே
சிவனருளு முருகசெம்பொற் கழலோனே
கருணைநெறி புரியு மன்பர்க் கெளியோனே
கனகசபை மருவு கந்தப் பெருமாளே

## வயலூர்.

(கரு) தானதன தாத்த தானதன தாத்த
தானதன தாத்த தனதான

ஆரமுலை காட்டி மாரனிலை காட்டி
ஆடையணி காட்டி அனுராக
ஆலவிழி காட்டி ஆசைமொழி காட்டி
ஆதரவு காட்டி எவரோடும்
ஈரநகை காட்டி நேரமிகை காட்டி
யேவினைகள் காட்டி உறவாடி
ஏதமயல் காட்டி மாதர்வலை காட்டி
ஈடழிதல் வாட்டி அருளாயோ

வீரபவ ராட்டு சூரர்படை காட்டில்
வீழனலை யூட்டி மயிலூர்தி
வேலையுறை நீட்டி வேலைதனி லோட்டி
வேலைவிளை யாட்டு வயலூரா
சேரமலை நாட்டில் வாரமுடன் வேட்ட
சீலிகுற வாட்டி மணவாளா
தேசுபுகழ் தீட்டி யாசைவரு கோட்டி
தேவர்சிறை மீட்ட பெருமாளே

## பொது

(கசு) தானன தனத்தத் தாத்த
தானன தனத்தத் தாத்த
தானன தனத்தத் தாத்த தனதான

பால்மொழி படித்துக் காட்டி
ஆடையை நெகிழ்த்துக் காட்டி
பாயலி லிருத்திக் காட்டி அநுராகம்
பாகிதழ் கொடுத்துக் காட்டி
நூல்களை விரித்துக் காட்டி
பார்வைகள் புரட்டிக் காட்டி உறவாகி

மேல்நக மழுத்திக் காட்டி
தோதக விதத்தைக் காட்டி
மேல்விழு நலத்தைக் காட்டு மடவார்பால்
மேவிடு மயக்கைத் தீர்த்து
சீபத நினைப்பைக் கூட்டு
மேன்மையை எனக்குக் காட்டி அருள்வாயே

காலனை உதைத்துக் காட்டி
ஆவியை வதைத்துக் காட்டி
காரணம் விளைத்துக் காட்டி ஒருகாலம்
கானினில் நடித்துக் காட்டி
ஆலமு மிடற்றிற் காட்டி
காமனை எரித்துக் காட்டி தருபாலா

மாலுற நிறத்தைக் காட்டி
வேடுவர் புனத்திற் காட்டில்
வாலிப மிளைத்துக் காட்டி அயர்வாகி
மான்மகள் தனத்தைச் சூட்டி
ஏனென அழைத்துக் கேட்டு
வாழ்வுற சமத்தைத் காட்டு பெருமானே

(௬௭) தானன தனத்தத் தாத்த
தானன தனத்தத் தாத்த
தானன தனத்தத் தாத்த தனதான

மேகலை நெகிழ்த்துக் காட்டி
வார்குழல் விரித்துக் காட்டி
வேல்விழி புரட்டிக் காட்டி அழகாக
மேனியை மினுக்கிக் காட்டி
நாடக நடித்துக் காட்டி
வீடுக ளழைத்துக் காட்டி மதராசன்

ஆகம முரைத்துக் காட்டி
வாரணி தனத்தைக் காட்டி
யாரொடு நகைத்துக் காட்டி விரகாலே
ஆதர மனத்தைக் காட்டி
வேசைகள் மயக்கைக் காட்ட
ஆசையை அவர்க்குக் காட்டி அழிவேனோ

மோகன விருப்பைக் காட்டி
ஞானமு மெடுத்துக் காட்டி
மூதமிழ் முனிக்குக் கூட்டு குருநாதா
மூவுல களித்துக் காட்டி
சேவலை உயர்த்திக் காட்டி
மோதலை அடித்துக் காட்டு வயலூரா

வாகையை முடித்துக் காட்டி
கானவர் சமர்த்தைக் காட்டி
வாழ்மயில் நடத்திக் காட்டும் இளையோனே
மாமலை வெதுப்பிக் காட்டி
தானவர் திறத்தைக் காட்டி
வானவர் சிரத்தைக் காத்த பெருமாளே

(கஅ) தனத்தத் தானத் தனதான
தனத்தத் தானத் தனதான

கருப்பத் தூறிப் பிறவாதே
கனக்கப் பாடுற் றுழலாதே

திருப்பொற் பாதத் தநுபூதி
சிறக்கப் பாலித் தருள்வாயே

பரப்பற் றாருக் குரியோனே
பரத்தப் பாலுக் கணியோனே

திருக்கைச் சேவற் கொடியோனே
செகத்திற் சோதிப் பெருமாளே

(கக)  தனதன தனன தனதன தனன
தனதன தனன  தனதான

திரிபுர மதனை ஒருநொடி யதனி
லெரிசெய்த ருளிய  சிவன்வாழ்வே
சினமுடை யசுரர் மனமது வெருவ
மயிலது முடுகி  விடுவோனே

பருவரை யதனை யுருவிட எறியு
மறுமுக முடைய  வடிவேலா
பசலையொ டணையு மிளமுலை மகளை
மதன்விடு பகழி  தொடலாமோ

கயதிரு முகமு மிடமுடை வயிறு
முடையவர் பிறகு  வருவோனே
கனதன முடைய குறவர்த மகளைக்
கருணையொ டணையு  மணிமார்பா

அரவணை துயிலு மரிதிரு மருக
அவனியு முழுதும் உடையோனே
அடியவர் வினையு மமரர்கள் துயரும்
அறவரு ளுதவு  பெருமானே

(௬00) தனதன தத்த தனதான
தனதன தத்த தனதான

வரையற வற்ற வடமாதர்
மயலுற வுற்று வசமாகி
நிரையைவி டுத்து நிதிதேடி
நினைவுதொ டுத்து நிகழ்வேனோ
பரையுமை பெற்ற பரிபாலா
பரமரு கக்கும் பெரியோனே
உரையது செப்ப வருவாயே
உலகும திக்த பெருமாளே

---

# திருப்புகழ்.

௬00 பாடல்

முற்றிற்று:





# அருணகிரிநாதரைப் புகழ்ந்து பின்காலத்தவர் கூறிய பாடல்கள்.

## 1. தாயுமானசுவாமிகள்.

அறிவை யறிவதுவே யாகும் பொருளென்
றுறுதிசொன்ன வுண்மையினை யோருநா ளெந்நாளோ

கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொற்ற
எந்தையரு ணாடி யிருக்குநா ளெந்நாளோ

ஐயா அருணகிரி யப்பா வுனைப்போல
மெய்யாக வோர்சொல் விளம்பினரார்—வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றுர் தன்னையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி ஞன்.

## 2. தனிப்பாடல்கள்.

வாக்கிற் கருணகிரி வாதவூ ரார்கனிவில்
தாக்கிற் றிருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரஞர்
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்.

காசுக்குக் கம்பன் கருணைக் கருணகிரி
யாசுக்குக் காளமுகி லாவனே—தேசுபெறு
மூழுக்குக் கூத்த னுவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கவ்வையெனக் கூறு.

உ

சிவமயம்.

# அருணகிரிநாதர் அருளிச்செய்த
# பஞ்சரத்னத் திருப்புகழ்.

(க) தனனதனத்த தனந்தானுதன
தனனதனத்த தனந்தானுதன
தனனதனத்த தனந்தானுதன தனதானு

மலடி வயிற்று மகன்போலேயொரு
புதையலெடுத்த தனம்போலேயொளிர்
வயிர மடுத்த களம்போ லேயிள மூலமானூர்
வலிய வணைத்த சுகம்போ லேகதி
ரொளிவிடு ரத்ன வடம்போ லேபரி
மளமிகு புட்ப வனம்போ லேசுர நதிபோலே

அலைகடல் பெற்றிடு பெண்போ லேவரு
புலவர் தமக்கிரு கண்போ லேகரை
யருகி லடுத்த சலம்போ லேயுன தழகாமோர்
அமுது புசித்த ரசம்போ லேதிரை
கடன்மடை விட்ட சலம்போ லேதின
மதிசயமுத்தமி ழன்பா லோதநி னருடாராய்

கலக லெனச்செல் சிலம்பா சீர்பெறு
மலைமகள் பெற்ற குழந்தாய் மாமத
கரிமுக னுக்கொரு தம்பீ கானவர் மகளார்மேோர்
கடிமலர் மொய்த்த சுரும்பே ஞானிகண்
மனது ருசித்த கரும்பே வானவர்
கவலை தணித்தரு ளன்பே மாயவன் மருகோனே

குலிசன் மகட்கொரு நண்பா வேழிசை
யளிகள் சுவைத்த கடம்பா போய்வரு
குரைகட லுக்கொரு சம்பா ஹய்வரு வடிவேலா
கொடிய பிணிக்கு மருந்தே தாள்பணி
யடியர் தமக்கு விருந்தே தோகைகொள்
குருகு நடத்து துரங்கா வேரக முருகோனே,

(உ) தான தனத்தத் தனந்தனுதன
தான தனத்தத் தனந்தனுதன
தான தனத்தத் தனந்தனுதன தன தனு

தேனைவடித்துச் சொரிந்ததோகொதி
பாலுடனுெக்கக் கலந்ததோநல
சீனியிலிட்டுப் பிசைந்ததோபல கனிதாமே
தேடியெடுத்துப் பிழிந்ததோநிறை
பாகுபதத்திற் சமைந்ததோவிவை
சேரவுருட்டத் திரண்டதோநவ ரசமீதே

ஞானமுளைத்துப் படர்ந்தசோதவதி
லேயெழுபுட்பச் சுகந்தமோமறை
நாமகள்வித்தை ப்ரசங்கமோவென வுரைநாவால்
நாவலர்மெச்சிப் பணிந்துதாழவு
நீயெனைமெச்சிக் கனிந்துபேசவும்
நானுனைமெச்சிப் புகழ்ந்துபாடவு மருடாராய்

யானைமதப்பட் டெழுந்ததாமென
வேயிருபத்மச் சதங்கையோலிட
வாறுமுகத்துக் குழந்தையாயரு ளனையார்பால்
ஆறுமுலைச்செப் பருந்துபாலுட
னாறுமலைக்கட் செரிந்தவாறென
வாறுமுலைக்குட் சுரந்தபாலதி வமையாதே

சோனைமழைக்கொத் திருந்துலாவரு
கீரசமுத்ரத் தரங்கமேலெழு
சூரியனொக்கத் திரிந்துலாவிய புதல்வோனே
சோலைமலைக்குக் கடம்புபோலவி
ராலிமலைக்குக் கொழுந்துபோலுயர்
சுவாமிமலைக்குக் கரும்புபோல்வரு முருகோனே

(ந)
தனன தனத்தத் தனத்ததத்தன
தனன தனத்தத் தனத்ததத்தன
தனன தனத்தத் தனத்ததத்தன தனதான

கலியையலைத்துத் தொலைத்துவிட்டொரு
பிடியையடித்துத் துரத்திவிட்டெழு
கவலைநெருப்பைத் தணித்துவிட்டற நெறியாலே
கடினகசப்புக் கினிப்புவிட்டென
துயிரிலழுக்கைத் துடைத்துவிட்டொரு
கருணைமழைக்குட் குளிக்கவிட்டினி யலையாதே

அலையுமனத்தைப் பிடித்துவைத்ததி
லுறையுமிருட்டுக் கருக்கலுக்குநி
னழகுவிளக்கைப் பதித்துவைத்தகம் தவியாதே
அறிவையுருட்டித் திரட்டிவைத்துநி
னமுதகுணத்தைத் துநிக்கவைத்தெனை
யடிமைபடைக்கக் கருத்துமுற்றிலு நினையாயே

மலைமகள்பயப் பட்டொளிப்பதற்கொரு
புகலிடமற்றுத் தவித்துநிற்கவும்
வடவரைமிக்குச் சலித்திருக்கவு மதனாலே
மலையரசற்குப் பழிப்பெனச்சொலியு
றவின்முறைப்பற் றெனக்குறித்தபின்
மகிமைகிடைக்கக் குறிப்பைவைத்தயர் விளையாதே

குலவரைவிட்டுத் திசைக்களிற்றினை
யுடலைமிதித்துக் கிழித்ததிற்சொரி
குருதிகுடித்துப் பெருத்தசெம்பிள முலையாளோர்
குறமகளைக்கைப் பிடித்துமற்றொரு
துரைமகளைக்கைப் பிடித்துமிக்குள
குருகிரியைக்கைப் பிடித்திருக்குமெம் முருகோனே

(உ) தன தன தன தன தந்தத்தத்தன
தன தன தன தன தந்தத்தத்தன
தன தன தன தன தந்தத்தத்தன தன தான

அரிவையரெனுமிரு தங்கக்கட்டிக
ளிருபுறமருவொரு சிங்கக்குட்டிநி
னறுமுகமதிபுனை செம்பொற்சுட்டியு முகமீதே
அழகொழுகியமது வுண்குத்துப்பியு
மவளிவள்விழிவரு தும்பிட்பட்சியு
மதுவிதுவெனுமிவை சண்டைப்பட்டது மெழுநூறும்

இரவிலொளிரணி யந்தத்திற்பொலி
யிமையவரவரர் சிந்திப்புக்களு
மிறைமகபதிபயி லிந்த்ரப்பட்டமு மழியாதே
இசையெழுகனகச தங்கைக்கொத்துகள்
கலகலவெனுமா விந்தப்புட்பமு
மிருவிழிகுளிரவு மென்றைக்கிப்படி வருவாயே

குரைகடலெனுமொரு தம்பட்டத்தொனி
கிழிபடமதனனு டம்பைச்சுட்டது
குளிர்தரவருண்மழை சிந்தத்தக்கவர் குருநாதா
குறமகள்கிளிமொழி கண்டிச்சைப்படு
பரிமளகளபசு கந்தத்தைப்புனை
குவிமுலைமுகடும ழுந்தத்தைத்திடு மணிமார்பா

திரைகடலமுதொரு பெண்பெற்றிட்டது
தெரிசனைபெறவிரு கண்பெற்றிட்டனு
தினம்விழிதுயில்பவர் தங்கச்சிக்கொரு புதல்வோனே
திமிரபடலமிகு துன்பத்துக்கெழு
தினகரனினைபவ ரன்பைப்பெற்றுயர்
திரிசிரகிரியினி லின்பத்தைத்தரு முருகோனே

(௫) தனனத்தானன தாத்தத்தனதன
தனனத்தானன தாத்தத்தனதன
தனனத்தானன தாத்தத்தனதன தனதான

வறுமைப்பாழ்பிணி யாற்றப்படாதுள
முருகிப்பேனது தோற்றப்படாதினி
மகிமைக்கேடுகள் பார்க்கப்படாதிலை தமையாதே
வலியப்பேயுடல் கூச்சப்படாமையு
முடியப்பேசிய நாச்சிக்கதாகையு
மறுசொற்காதுகள் கேட்கப்படாமையும் வாராதோ

கருவிப்பாய்புலி வேட்டைக்குளேவரு
பசுவைப்போன் முடியாற்பட்டபாடொரு [யோ
கதையைப்போலிதை யார்க்குச்சொல்வேனின மறியா
கவலைசாகர நீச்சுக்குளேயுயிர்
தவறிப்போகுமு னோட்டத்திலோடியுன் [னே
கருணைத்தோணி யிலேற்றிக்கொள்வாய்தின மலைவே

குறைபட்டேனுயிர் காத்துக்கொளாயென
முறையிட்டேகரி கூப்பிட்டநாளொரு
குரலிற்போயுயிர் மீட்டுக்கொள்வோர்திரு மருகோனே
குளிர்முத்தாலணி மூக்குத்தியோடிரு
களபப்பூண்முலை பார்த்துப்பெண்மோகினி
குவளைப்பார்வையின் மாட்டிக்கொள்வோர்பணி குருநாதா

நறையிற்றூதுபூக் கொத்திலேகனி
கிழியத்தேனுமிழ் காய்க்கொத்திலேமயி
னடனக்கால்படு தோப்புக்குளேபல வயலூடே
நதியிற்காவிரி யாற்றுக்குளேபயில்
வளமைச்சோழநன் னாட்டுக்குளேசில
நகரிற்சீர்பெறு மோக்ஷத்தையேதரு முருகோனே

பஞ்சரத்னத் திருப்புகழ் முற்றிற்று.

சிவமயம்.

# மாம்பழக்கவிராயர் அருளிச்செய்த

# சந்தப்புகழ்.

## க. திருப்பரங்கிரி.

தனதன தனதன தனத்த னந்தன
தனதன தனதன தனத்த னந்தன
தனதன தனதன தனத்த னந்தன தனதான

கதிர்பா வியமணி யுதத்தி லம்புய
மதுமலர் வனிதையை யிருத்து பைம்புயல்
கடவுளர் குலமுயர் தரக்க டைந்திடு பொழுதூடே
சடலெழு மமுதினு மினித்த செந்தமிழ்
முனிகொள வருமறை விரித்த நின்கழல்
கருதியு மனநினில் வருத்த மென்பது வரலாமோ

அதிர்பரி புரநிறை தரித்த கிண்கிணி
கலகல கலெனமு னெதிர்த்த வஞ்சக
வசுரர்கள் சிதறிட நடத்த லங்க்ருத மயின்மீதே
யருகினில் விரைவுட னடுத்து வெம்பவ
விருண்முழு மையுமொரு கணத்த கன்றிட
வனவர தமுமதி திருத்தி நின்றினி யெனையாள்வாய்

முதிர்பல வளமலி தினைப்பு னந்தனின்
மொழிநிகர் கிளிகடி குறக் கருங்குயின்
முலையினைமுகடுமு தலிற்குன் ழங்தொளிர் புயலோலா
முலைகளை யெளிதினி லவிழ்த்து வண்டினை
முறைமுறை விளரிகள் படிக்க வெண்டிசை
முருகுல வியநறு மலர்க்க டம்பணி நெடுமார்பா

சதிர்பெரு கியகொடு முடிக்ர வுஞ்சம
தடைபட மகபதி வினைக்க டுஞ்சிறை
தனில்வில கிடவிடு முனைப் பெருந்திறல் வடிவேலா
சருவிய வறுபகை களைக்க ளைந்ததி
சயரக சியநிலை தனைத்தெ ரிந்தமர்
தவவிர தியர்புகழ் திருப்ப ரங்கிரி முருகோனே.

## உ. திருச்செந்தூர்.

தனன தனத்த தனத்தந் தானன
தனன தனத்த தனத்தந் தானன
தனன தனத்த தனத்தந் தானன தனதான

தரும குணத்தை விடுத்தும் பாதக
வுருவு படைத்து மிடிப்புன் பேய்தொடர்
தாலினு லுத்தர் களைக்கொண் டாடியு மவர்பாலே
தமிழை யிறைத்து மலுத்துந் தீநா
கதனி லிறக்கி யழுத்தும் பேதையர்
தமது வலைக்கு ளிளைத்தும் பாழினி லலைவேனோ

மருளை யொழித்து வருத்தந் தீரிது
தருண மசட்டை செயிற்பின் பார்கதி
வரும மெதற்கு நினைக்கின் றுயது சரியாமோ
மயிலை நடத்தி வாற்குந் தூரம
தலநி னியற்கை தடுக்கின் றுமொரு
வருமில் சமஸ்த வகைக்குங் காரண நிதிநீயே

அருகு குதித்து விழக்குன் றேறிய
வருணை கிரிக்கு மிகத்தந் தாய்வரை
மகவல் படித்து வழுத்துங் கீரன திடர்தாழா
தகல விரக்க முதித்தங் கோடினை
திரிபு வனத்து முனக்குண் டோநிக
ரதனை யெடுத்து விரிக்கும் போறி வினனோே

பருவ தளத்தை யவிழ்த்தன் பாலளி
சுருதி யிணக்க மதிற்குன் றிசை
பலவு மிழற்று மதுப்பங் கேருக மலரூடே
பாவி யுடுக்க ளைனத்தண் சூல்வளை
தாள வினத்தை யுயிர்க்குஞ் சீர்திகழ்
பழன முடுத்த திருச்செந் தூருறை முருகோனே

## ரு திருவாவினன்குடி.

தானன தனதன தான தந்தன
தானன தனதன தான தந்தன
தானன தனதன தான தந்தன தனதானா

ஆணவ முதலிய பாழ் மலங்களி
னுலவ னியினிடை தீது நன்றறி
யாதறு தினமெளி யேன் வருந்துவ தழகாமோ
ஆதர வினையல தேது வஞ்சக
நீங்கின குவது நியாய மன்றெனை
யாளுதி சமையமி தாதி சங்கர குருநாதா

## ௪ திருவேரகம்.

தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன தனதான

ஏதித்தனை வாதெளி யேன்முறை
காதிற்புக வேயிலை யோபிற
ரேசிப்பல கூறிடு மாறெனை விடலாமோ
ஏழைக்குரு காதது பாதக
மேதுர்க்கலி காலசு பாவமி
தேலுத்தம தேவதை காரண மெனசாமீ.

யாதித்தனி நாயக நீசெயல்
சோதிக்கவொ ணாதினி மேலென
தாபத்தையெ லாமுட னேயெழு பரியூர்தே
ராதித்தன்மு னேபனி போலய
லோடப்பணி நீடிய தீவினை
யாசைக்குள்வி ழாமல்வி வேகம தருள்வாயே

போதித்தசிவாகம நூல்வழி
சாதித்தத போதனர் மானத
பூசைக்குரி யாய்பரி பூரண சகுணளா
பூவிற்பொலி நாதனை வேலவி
சாரித்தனை யான்மரு ளாமிருள்
போகச்சிறை யூடெ டாவிய புகழ்மேலோய்

## ௪ திருவேரகம்.

தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன தனதான

ஏதித்தனை வாதெளி யேன்முறை
காதிற்புக வேயிலை யோபிற
ரேசிப்பல கூறிடு மாறெனை விடலாமோ
ஏழைக்குரு காதது பாதக
மேதுர்க்கலி காலசு பாவமி
தேலுத்தம தேவதை காரண மெனசாமீ

யாதித்தனி நாயக நீசெயல்
சோதிக்கவொ ணாதினி மேலென
தாபத்தையெ லாமுட னேயெழு பரியூர்தே
ராதித்தன்மு னேபனி போலய
லோடப்பணி நீடிய தீவினை
யாசைக்குள்வி ழாமல்வி வேகம தருள்வாயே

போதித்தசிவாகம நூல்வழி
சாதித்தத போதனர் மானத
பூசைக்குரி யாய்பரி பூரண சகுணாளா
பூவிற்பொலி நாதனை வேலைவி
சாரித்தனை யான்மரு ளாமிருள்
போகச்சிறை யூடெ டாவிய புகழ்மேலோய்

சோதித்திரி சூலக பாலவி
பூதித்தட மார்பக ஞானசொ
ரூபப்பெரு மான்மகிழ் தேசிக னெனவேநோர்
சோணப்புய லான்மயின் மாதரு
நாணப்புது நாடக மேபயில்
சோலைத்திரு வேரக மேவிய முருகோனே

## ௫ குன்றுதோறாடல்.

தந்ததா னதனன தானதன தானதன
தந்த்தா னதனன தானதன தானதன
தந்ததா னதனன தானதன தானதன தனதான

முந்துகா மாதிமுழு மோசவிப ரீதவலை
வந்துமேன் மேலுலவு பாசவுவ ராழிதனின்
முங்கியே மீளவழி யேதுமுண ராதுநிலை தளர்வேனை
முன்பினு லோசனைசெ யாமலுட னேயுனது
செம்பொனே போலுமிரு பாதமல ராகியதொர்
மொய்ம்புகூர் தோணிதரு வாய்பருவ காலமிது சலியாதே
கந்துதூ ளாயுலைய வீசியிகல் பாய்தவள
தந்தியூர் வோனதுத போபலகு மாரிபுணர்
கந்தநா தாதடைப டாதபல பூதகண தளவீரா
கண்களீ ருறுடைய காரணகு காவுசித
கங்கைபா லாகடின சூரகுல கோபஜெய
கங்கணு தேவகவி வாணர்கள்ப ராவுகன கொலுராயா
நந்துநீ ருடுகெதிர் தாவமுதிர் சூல்வயிறு
நொந்துமா ருதலறி யீனுமணி வானுடுவு
நந்தவே சூழ்சரவ ணோதயவ னேகபிர பலதுயா

நம்பினோர் மானததி யானவடி வாயுறையு
மெம்பிரா னேயுலக ஜீவப்ரி பாலனந
யந்தகோ லாகலச டானனப டீரபரி மளதேகா
கொந்துவார் தேனிடைவி டாமலய லேயொழுகு
பைங்குரா நீழலினு மேவிமகிழ் வாய்வளர்கு
ளந்தைவே லாபழைய வேதமுடி மீதுநட மிடுவாழ்வே
கொண்டலூழ் சோலைசெறி சாரங்களெ லாமருவி
வண்டரா மாலையென வேயசைய மேன்மைதிகழ்
குன்றுதோ ரூடியவு லாசசுகு ணாபரண முருகோனே

## ௬ பழமுதிர்சோலை

தனதனதான தனத்தன தானன
தனதனதான தனதன தானன
தனதனதான தனத்தன தானன தனதான

வழிவழிமூட ரெனத்திரி வோர்களு
முனதொருநாம நினைக்கினு மோதினு
மதியினராகி யுயர்ச்சியை மேவுவ தியல்பேநான்
வரவரவாடி மலத்திட நீவிடு
வதுசரியான தலச்சிறி தாயினு
மனதிளகாம லிருக்கிற காரண மெதினாலோ
விழியிணையாறு படைத்தனை யேயென
துடலில்வியாதி தனைத்தெரி யாதுள
விவரமியாது தமிழ்த்துதி காதினு நுழையாதோ
விவிதகிலேச மிணிச்சகி யேனிது
தருணமயூர வயப்பரி மீதினில்
விரைவுனேறி யடுத்தெனை யாளுதி முனியாதே

யழிவறுஞான விளக்கொளி யேயறி
வரியவினோத மகத்வவ கோசர
வருவுருவாய முதற்பொரு ளேபிர ணவவாழ்வே
யடியர்தியான தவப்பய னேயுமை
யவள்கைகுலாவு சருக்கரை யேதனி
யமிர்தசொரூப ரசக்கனி யேவிளை தருதேனே
பழிதொடாராத குணக்கட லேரக
சியசிவயோக முயற்சியி னுலெழு
பரமசுகாநு பவத்தெளி வேயிமை யவர்கோவே
பகலிரவார்வ மிகுத்தக லாதர
மகளிர்கள்பாடி நடித்திட வேவளர்
பழமுதிர்சோலை மலைக்கரு ணகர முருகோனே

## எ சிவகிரி.

தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன தனதான

இட்டப்படி கட்டித் தழுவித
ழிற்பற்பதி வட்டத் தனநெரு
டிக்கைத்தொழின் மெத்தச் சொகுசெயல் விலகாதே
யெத்திக்கினு நிற்கொப் பிலையினி
வெட்கத்தைவி டுத்துச் சுகியென
வெத்திப்பல சொத்துக் களினையு மடியோடே

தட்டத்தகு கெட்டித் தெரிவைய
ரொட்டுக்குள கப்பட் டியல்வழி
தப்பிப்பிர மித்துப் பகலிர வுழலாமே
சற்பத்தரி னத்துப் பழகியு
ளைப்புத்தியி ருத்தித் தொழவினை
தத்துத்தவிர் வித்துத் திருவருள் புரிவாயே
மட்டற்றம தத்துக் கயமுக
துட்டப்பகை வற்றெற் றிமையவர்
வர்க்கத்தையி ரக்ஷித் திடவரு மொருசூரா
மத்தத்தையெ ருக்கைக் சிறுபிறை
யைக்கொக்கிற கைப்பச் சறுகினை
வைத்திட்டமு டித்தற் பரனது சுகுமாரா
கட்டச்சக விச்சைத் தொடர்பற
நிட்டைத்தல மெட்டித் தவநடை
கற்றுத்தெளி சித்தர்க் கினிதெதி ருபகாரா
கற்பத்துநெ ருக்கத் தினுநிலை
பெற்றுப்பொலி வுற்றுத் தழைதரு
கற்றைக்கிர ணப்பொற் சிவகிரி முருகோனே

சந்தப்புகழ் முற்றிற்று.

ஓ

சிவமயம்.

விவேகாநந்த சுவாமிகள் உபந்நியாசங்களாகிய

# ஞானத்திரட்டு.

"லோகோபகாரி" பத்திரிகாசிரியராயிருந்தவரும், "தத்துவ தரிசனி" "ஞானதரிசனி" இவற்றின் நூலாசிரியருமாகிய வி. **நடராஜ ஐயரவர்கள்** இயற்றியது.

இதில் சுவாமி விவேகானந்தர் அமெரிக்கா சிக்காகோ சர்வமதமஹாசபையில், **கர்மயோகம், ஞானயோகம், பத்தி யோகம்,** என்னும் அரிய விஷயங்களையும், ஆரியமதத்தின் உண்மைப்பொருளையும் வெற்றியுடன் நிலைநாட்டி ஆங்கிலத்தில் செய்த பிரசங்கங்களின் தமிழ் மொழிபெயர்ப்பு.

**இதிலடங்கிய விஷயங்கள்.**

1. யதார்த்தமனிதன்
2. போலிமனிதன்
3. சிக்காகோ முதற்பிரசங்கம்
4. இந்துமதம்
5. கர்மயோகம்
6. இல்லறம் துறவறம்
7. விக்கிரகாராதனை
8. கடமை
9. நன்மை தீமை
10. முக்தி
11. பக்தி
12. பக்தியோகம்
13. ஆசாரியன் அவசியமென்பது
14. பாபக்தி
15. இராஜயோகம்
16. மாயையைப்பற்றிய கதைகள்
17. விவேகாநந்தசுவாமிகள் சரித்திரம்

**விலை. ரூபாய். 1-20.**

---

சரஸ்வதி புத்தகசாலை, 63, ஜிந்தும்பிட்டித்தெரு, கொழும்பு.

# கம்பராமாயண வசனம்.

[ திருவவதாரமுதல் பட்டாபிஷேகம் வரையில். ]

ஸ்ரீய: பதியாகிய ஸ்ரீமந் நாராயணனே ஸ்ரீ ராமராக அவதரித்தது துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்த சரித்திரத்தைக் கூறும் இந்த திவ்வியநூலை மிகுந்த தொகையைக்கொடுத்து வாங்கி வாசிப்பதற்கு சிலர் பின்னடைவதை உத்தேசித்து கதையினுடைய அமைப்பைக் கிஞ்சிற்றேனும் வேறுபடுத்தாமல் சிறுஎழுத்தில் அழகாய் உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிட்டு யாவரும் வாங்கி வாசிக்கும்வண்ணம் விலை குறைக்கப்பட்டிருக்கிறது.

விலை ரூபாய். 3-40

---

# செந்தமிழ் வானவர் திவ்விய சரித்திரம்.

ஔவைபிராட்டியார், திருவள்ளுவநாயனர், பட்டினத்தார், கபிலதேவர், குமாரதேவர், குமரகுருபரசுவாமிகள், சிவப்பிரகாசசுவாமிகள் முதலியவர்களின் அற்புத சரித்திரங்கள் அவரவர்கள் தனிப்பாடல்களுடன் அடங்கியுள்ளது.

விலை சதம். 90

# பட்டினத்துப் பிள்ளையார்

திருவாய்மலர்ந்தருளிய

திருப்பாட்டிறிரட்டு, அருட்புலம்பல், பத்திரகிரியார்

அருளிச்செய்த

# மெய்ஞ்ஞானப் புலம்பல்

தத்துவார்த்த விளக்கவுரையுடன்.

பட்டினத்தடிகளால், ஆங்காங்கு எம்மனோரை உய்விக்கு மாத்திரையானே திருவாய்மலர்ந்தருளப்பெற்ற, கோயிற் றிருவகவல், திருவேகம்பமாலை, திருவிசைப்பா, பொது, முதல்வன் முறையீடு, அருட்புலம்பல், இறந்தகாலத்திரங்கல் நெஞ்சொடு புலம்பல், பூரணமாலை, நெஞ்சொடு மகிழ்தல், என்னும் இவைகளடங்கிய திருப்பாட்டிறிரட்டு, உடற்கூற்று வண்ணம், என்பவற்றிற்கு அநேகர் பதவுரையும் கருத்துரையும், எழுதியிருக்கின்றனர், அவைபோலல்லாது பதவுரையும், விசேடம் உதாரணம் என்றுமிவைகளமைந்த விருத்தியுரையும் எடுத்துக்காட்டி பெரியோர்களுடைய ஞானசாஸ்திரங்களிலிருந்து மேற்கோட்பாக்கள் உதாகரிக்கப்பட்டிருக்கின்றன.

அடிகளின் சரித்திரங்களுடனும், 7 திருவுருவப்படங்களுடனும் உயர்ந்தகலிக்கோபைண்ட் செய்யப்பெற்றது.

விலை ரூபாய். 2-25

பரமார்த்த தரிசனம் என்னும்

# ஸ்ரீ பகவத்கீதை வசனம்.

மனிதர்களின் அஞ்ஞான இருளைப்போக்கி நல்வழிக் கடைப்பிடித்தொழுகுமாறு எல்லா தத்துவங்களையும் விளக்கிக்காட்டி, உண்மைப் பொருளை யடைதற்குரிய உபாயங்களை உபதேசிக்கும் நூல்களில் முதன்மைபெற்ற இப் பகவத்கீதை என்னும் அரியநூலானது ஆதியில் வேதவியாசரால் 18 அத்தியாயங்களாக 700 சுலோகங்களில் இயற்றப்பட்டது. இது மிகச்சிறப்புடைய நூலாதல்பற்றிய இதற்கு ஸ்ரீ சங்கராசாரியார், ஸ்ரீ ராமநுஜர், ஸ்ரீ மாத்துவாசாரியார், ஸ்ரீதரர், இராகவேந்திர சுவாமிகள், மதுசூதன சரஸ்வதி சுவாமிகள், முதலியபெரியோர்கள் பாஷ்யங்களுமியற்றியிருக்கின்றனர். அன்னிய தேசத்தவர்களும் தத்தம் பாஷைகளில் இதை மொழிபெயர்த்திருக்கின்றனர். இத்தகைய சிறப்பு வாய்ந்த இந்நூலானது தமிழில் பலவகையாக வெளியிட்டிருப்பினும், அவைகளுள் இதில் ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ ராமனுஜர் மாத்வர் முதலியவர்கள் வடமொழியில் செய்த பாஷ்யக்கருத்துகளை தெள்ளிய தமிழ்வசனநடையில் ஆங்காங்கு உபநிஷத்துக்களினின்றும் பலசாஸ்திரங்களின்றும் மேற்கோள்களும் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது.

(கீதா உபதேசப் படத்துடன் உயர்ந்த கலிகோபைண்ட் செய்யப்பட்டது.)

**விலை ரூபாய். 2-25**

## தாயுமான சுவாமிபாடல்.

மெய்கண்டவிருத்தியுரையுடன்

(730 பக்கம் ஸ்வாமிகளின் திருவுருவப்படத்துடன் அழகிய கலிக்கோபைண்டு செய்யப்பெற்றது.)

விலை ரூபாய். 4-50

## தாயுமானசுவாமிபாடல்.

மூலம், ஸ்வாமிகளின் சரித்திரத்துடனும் படத்துடனும்.

விலை ரூபாய். 1-20

பட்டினத்துப் பிள்ளையார் திருவாய்மலர்ந்தருளிய

## பிரபந்தத்திரட்டு, விருத்தியுரை.

(பட்டினத்தடிகளின் திருவுருவப்படத்துடன் உயர்ந்தகலி கோபைண்ட் செய்யப்பெற்றது)

விலை ரூபாய். 4-00

## மூவர் அடங்கன்முறை.

(கிளேஸ் கலிக்கோபைண்ட்.)

விலை ரூபாய். 5-75

# திருமுறைத் தேவாரத்திரட்டு.

இதினுள் மூவர் தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், திருபிரபந்தமாலை, பெரியபுராணச் செய்யுட்டிரட்டு, தேவார திருப்பதி வைப்புத்தலவிளக்கம், பதிகசரித்திரம் தலமிருக்குமிடம், தலவிசேடம் முதலியன அடங்கியுள்ளன.
(பாராயணத்துக்கு அநுகூலமாக உயர்ந்தகிளேஸ்கடிதத்தில் அச்சிட்டு கலிக்கோபைண்ட் செய்யப்பெற்றது.)

விலை ரூபாய். 2-80

# பகவத்கீதை.

இது, கிரந்த சுலோகமும், தமிழ் அக்ஷரத்தில் சுலோகமும், (சங்கர இராமாநுஜ பாஷ்யங்களை அநுசரித்து பிரமஸ்ரீ இராமசந்திராநந்த சரஸ்வதி சுவாமிகளால் அனைவருக்கும் விளங்கும்படி தெளிவாக எழுதிய) தமிழ் தாத்பரியமுமாக ராயல் 32 சைசில் நள்ளகிளேஸ் கடிதத்தில் அச்சிட்டுக் கலிக்கோ பைண்ட் செய்யப்பட்டுள்ளது.

விலை ரூபாய். 1-20

அறுபத்துநான்கு படங்களடங்கிய

# தேவி பராக்கிரமம்.

---

சமஸ்தலோக காரணபூதையாய் ஐம்பெருந்தேவர்களுக்கு உற்பத்தி லயஸ்தானமாய் பிரமேந்திராதிகட்குமவரவர் இடுக்கண்களைக் களைந்தும் அவரவர் இஷ்டசித்தியருளும் கருணாநிதியாய் விளங்கும் சர்வலோக மாதாவாகிய பராசத்தியின் லீலாவிபூதிகள் தேவீபராக்கிரம மெனப்படும். இந்நூலைத் தமிழில் தெள்ளிய நடையில் இயற்றி அவ்வற்புதங்களை நேரில் கண்டாற்போல விளக்கத்தக்க 64 திருவுருவப்படங்களமைத்து முக்கியமான இடங்களில் வேதம், ஆகமம் புராணம், இதிகாசம் முதலிய வடநூல் மேற்கோள்களும் தமிழ்நூல் மேற்கோள்களுங் காட்டி இருக்கின்றன. இதை வாசிப்பவர்கள் தேவியின் பிரபாவத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அறிவார்களென்பது திண்ணம்.

**விலை ரூபாய். 1-50**

---

# விநோத ரசமஞ்சரி.

---

தமிழ்ப்பாஷையிலுள்ள நூல்கள் அனைத்தும் சாதாரண மர்க உணர்தற்கரிய செய்யுள் ரூபமாக இருத்தலின் அவை ஐயந்திரிபுறக் கற்றோர்க்கன்றி மற்றோர்க்கு எளிதில் புலப் படாமை நோக்கி, வசனநடையாயிருந்தால் யாவர்க்கும் உப யோகமாகுமென்று கருதி, சென்னைத்துரைத்தன வித்தியா சாலையில் பிரதம தமிழ்ப்பண்டிதராயிருந்த அஷ்டாவதானம் **வீராசாமி செட்டியாரவர்கள்** ஆண் பெண் இருபாலரும் அவசியமாக அறியவேண்டிய நூல்களிலுள்ள கருத்துகளை, **தெய்வங்கொள்கை, கற்றுய்ந்தொழுகல், நன்றிமறவாமை, கற்புநிலமை,** முதலிய ஒன்பது வியாசங்களும் ஒட்டக்கூத் தர், காளிதாசர், கம்பர், காளமேகப்புலவர், ஔவையார், புக ழேந்தி, முதலிய வித்துவான்களின் சரித்திரமும், பாடல் களுஞ் சேர்த்து நல்ல கிளேஸ் கடிதத்தில் அச்சிட்டு கலிக் கோபைண்ட் செய்யப்பட்டிருக்கின்றது.

விலை ரூபாய். 2-25

---

சரஸ்வதி புத்தகசாலை, 63, ஜிந்தும்பிட்டித்தெரு, கொழும்பு.

# ஆங்கில ஆசான்.

இங்கிதங்காட்டும், ஆங்கிலபாஷையை இந்தியர்கள் யாவரும் படித்து உணர்ந்து நடக்காவிடில் நவீன நாகரீகத்தில் சீர்திருத்தமடைய முடியாதென்பது ஒப்படைந்த உண்மையாகிவிட்டது. எனவே, அப்பாஷையை எளிதில் கற்றுக்கொள்ளுவதற்கு நல்ல ஆசான் ஒருவனாகிலும் அல்லது அந்த ஆசானைப்போன்ற நல்ல புத்தகம் ஒன்றாகிலும் இன்றியமையாததாக வேண்டப்படுகின்றது. இந்தக்குறையை நீக்குவதற்காக வெளியிடப்பட்ட இப்புஸ்தகத்தின் மூலமாய் உபாத்தியாயர் இல்லாமல், இங்கிலீஷ் கற்றுக்கொள்ளலாம். இதில் ஒரு சொல்லை உச்சரிக்கும் விதமும் அதன் இங்கிலீஷ் அர்த்தமும் மிருகம், பட்சி, கிழமை, மாதம், வருஷம், புஷ்பம், ஆயுதம், ஊர்கள் முதலியவற்றின் பெயர்களும், கடிதமெழுதுதல், உயில், பத்திரங்கள், கல்யாண, சீமந்த, கருமாதி நோட்டீஸ்கள் முதலியன இங்கிலீஷிலும் தமிழிலும் எழுதும் விதமும் சிறு கதைகளும், பழமொழிகளும் அவற்றின் இங்கிலீஷ் அர்த்தமும் வெகுசுலுவான நடையில் விளக்கப்பட்டிருக்கின்றன.

விலை ரூபாய். 2-25

யாழ்ப்பாணம் பருத்தித்துறை, பிரமஸ்ரீ
ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள்
பதிப்பித்த நூல்கள். சதம்.

**கந்தரநுபூதி உரை.** (சிறந்த பதவுரையுடன் இலக்கணக்குறிப்பும் வடசொற்களின் விளக்கமும் வேறும் பல விரிவுகளுமமைய எழுதப்பட்டது. இந்நூலையும் திருப்புகழ்முதலிய வேறும் பல தோத்திர நூல்களையும் அருளிய அருணகிரிநாதரின் சரித்திரமும் சேர்க்கப்பட்டிருக்கிறது) 36

**ஆத்திசூடி கொன்றைவேந்தனுரை.** (பிழையறப் பரிசோதித்து சிறந்த பதிப்பாக அச்சிடப்பட்டுள்ளது. 06

**தோத்திரத்திரட்டு.** (தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, புராணம், திருப்புகழ் இவற்றினின்று திரட்டப்பட்டது.) 08

கந்தரலங்காரம் கந்தரநுபூதி மூலம் 06

வாக்குண்டாம் நல்வழி, நன்னெறி 06

பிள்ளையார் கதை 15

வாக்குண்டா முரை 06

ஏகாதசிப்புராணம் 30

நீதி வெண்பாவுரை 25

திருக்குறள் அறத்துப்பால் மூலம் 12

கந்தபுராணம், உற்பத்திகாண்டம் உரையுடன். ரூபா 5-00

# ஆத்திசூடி நீதிக்கதைகள்.

ஸ்ரீ கலைமகள் அவதாரமாகிய ஔவையார் அருளிச் செய்த ஆத்திசூடி நீதிவாக்கியங்களுக்கு உதாரணமாக, இதிகாச புராண சரித்திரங்களிலிருந்து எடுக்கப்பெற்ற 108 கதைகள் இனிய செந்தமிழ்நடையில் நீதிகளை விளக்கி எழுதப் பெற்றுள்ளன. முகதலையில் ஓர் அழகிய படமும் அமையப் பெற்றது.

விலை சதம். 50

# தேசாபிமானிகள் சரித்திரம்.

பன்னிரு உத்தம தேசபக்தர்களின் சரிதையும் அவர்கள் படங்களுடன்.

விலை சதம். 90

# மஹாத்மா காந்தியின் சரித்திரம்.

---

உலகிலே ஒப்புயர்வற்ற மஹாபுருஷனெனவும் ஸ்ரீ பாரதபூஷணமெனவும் பெரியோர்களால் கொண்டாடப்படும் இப்பெருமானது சரித்திரத்தையும் அரும்பெருங் குணங்களையும் உயர்ந்த சீலத்தையும் ஒப்புயர்வற்ற தன்னலம் பரித்தியாகத்தையும் அறியவிரும்பும் தமிழ்மக்கள் அனைவருக்கும் இந்நூல் சிறந்த கருவியாகும் குழந்தைப் பருவமுதல் இன்றளவும் மஹாத்மாவின் வாழ்வில் நேர்ந்துள்ள சம்பவங்கள் எல்லாம் அழகான தமிழ்நடையில் பலரும் படித்தறியும் வண்ணம் விரிவாக எழுதப் பட்டுள்ளன.

## விலை சதம். 60

---

# பரதன் உத்தம சகோதரன்.

பலகோடி நீதிகளைப் புகட்டும் ஸ்ரீ ராமாயணக் கதைகளைச் சுருக்கமாகவும், அவற்றுள் பரதனது குணாதிசயங்களை விரித்தும் கம்பராமாயணத்தினின்றும் சில முக்கிய மேற்கோட்பாக்களுடன் தெள்ளிய நடையில் யாவருக்கும் எளிதில் புலப்படும்படி இனிமையாக எழுதியுள்ளது.

விலை சதம். 60

# ஆரிய சரித்திரம்.

## நீதிக்கதைகள்.

சுமார் 300 பக்கங்களுள்ளது. சித்திரப்படங்களும் அமையப்பெற்றது. தெள்ளிய செந்தமிழ்நடையில் எழுதப்பட்டு, உயர்ந்த கடிதத்தில் பெரிய எழுத்துக்களால் அச்சடிக்கப்பட்டு அழகாய் பைண்ட் செய்யப்பட்டுள்ளது.

விலை ரூபாய். 1-20

# ஐசுவரிய சக்கரம்.

மஹாத்மா காந்தி பாலபாரதத்தில் எழுதிய 30 வியாசங்களின் மொழிபெயர்ப்பு. இதில் மேஞட்டுச்சாமான்களை விலக்கவேண்டியது, சுதேசியத்தை விருத்திசெய்யவேண்டிய அவசியம், கைராட்டினத்தின் பெருமை, கைநூலிஞலே செய்யப்பட்ட ஆடையின் கௌரவம், கைராட்டினத்திஞல் சகலரும் நூல் நூற்கவேண்டிய அவசியம் அதஞல் உண்டாகும் லாபம், கைராட்டினம் கைத்தறி இவைகள் இருக்கவேண்டியமுறை, பாவு கஞ்சிபோடும் வகை முதலிய பலவும் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

**விலை சதம். 60**

# ஸ்ரீ கிருஷ்ணன் தூது.

இது வில்லிபுத்தூரார் பாரதத்தைத் தழுவி, பாரதக் கதையை ஆதியோடந்தமாகச் சுருக்கமாகவும், கிருஷ்ணன் தூதுச்சருக்கத்தை விரிவாகவும், அவ்வவ்விடங்களில் சமயோசிதத்துக்கேற்ப வில்லிபுத்தூராரின் அரிய பாக்களின் மேற்கோளுடனும், பள்ளியிற்பயிலும் சிறுமியர்களுக்கும் ஏனையோருக்கும் மஹாபாரதக்கதை இனிது விளங்குமாறு எழுதப்பட்டது. படிக்கப் படிக்கச் சுவையை உண்டுபண்ணும், சகலநீதிகளும் அமையப்பெற்றது.

விலை ரூபாய். 1-20

# ஒத்துழையாமை ஏன்.

இப்பொழுது தேசமெங்கும் தெய்வீக ஆவேசத்துடன் வேரூன்றிவரும் ஒத்துழையாமை இயக்கத்தின் விருத்தாந்தத்தை ஆதியோடந்தமாய் ஒருகோர்வையாக அறியவிரும்புவோருக்கு உற்றநூல் ஒத்துழையாமையே சுயராஜ்ய வாழ்வுக்கும் சுயமதிப்புக்கும் ஒப்பற்ற சாதனம் என்பதையும், அதன் உள்ளுறைத் தத்துவங்கள் இன்ன இன்ன என்பதையும், செம்பாகமான தமிழ் நடையில் நன்கு விளக்கிக்காட்டப்பட்டுள்ளன. ஒத்துழையாமை விஷயமாக மஹாத்மா காந்தி செய்துள்ள அரிய பிரசங்கங்கள் சிலவும் சேர்க்கப்பட்டுள்ளன.

விலை சதம். 60

